

# அம்ருதா
AMRUDHA

வேள்வி 13 கலசம் 155
Volume 13 Issue 155
ஜூன் 2019 ரூ. 25
June 2019 Rs.25
நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
A Monthly Magazine of Art, Literature and Social Criticism



எழுத்தாளர்களின் மறுபக்கம்
**ஸிந்துஜா**



ஆஸ்திரேலிய ஆதிவாசி இளைஞனுடன் ஒருநாள்
**நடேசன்**



இஸ்லாமிய வாழ்வியலின் அசல் பிரதி
**தோப்பில் முஹம்மது மீரான்**

## தமிழ்ப்பற்றும் மொழி அரசியலும்
**சுமதி ராமசுவாமி**

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்



Rs. 140



Rs. 130



Rs. 170



Rs. 110



Rs. 200




Rs. 100



Rs. 80




Rs. 90




Rs. 90

**அம்ருதா**

#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 73387 57878, 94440 70000,
**மின்னஞ்சல்:** info.amrudha@gmail. com, **இணையதளம்:** www. amruthamagazine. com

கேள்வி 13 கலசம் 155



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஜுன்-2019 விலை ரூ. 25



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

# விவசாயத்தை பாதுகாப்போம்

பிரபு திலக்

தூத்துக்குடி துப்பாக்கி சூட்டின் ஓராண்டு நினைவு தினம் சென்றமாதம் அனுசரிக்கப்பட்டது. அந்த துப்பாக்கி சூட்டில் பலியான 13 பேரின் கோரிக்கையான ஸ்டெர்லைட் தாமிர உருக்கு ஆலையை மூட வேண்டும் என்பதையே இப்போது தமிழக அரசும் கொள்கை முடிவாக கொண்டிருக்கிறது. ஆலையை மீண்டும் திறக்க முயற்சிக்கும் வேதாந்தா நிறுவனத்துக்கு எதிராக உச்ச நீதிமன்றத்திலும் வாதாடியுள்ளது.

இந்நிலையில், "தூத்துக்குடி ஸ்டெர்லைட் ஆலைக்கு எதிராக கடந்தாண்டு நடந்த போராட்டத்தை வைத்து தற்போது வரை விசாரணை என்ற பெயரில் துன்புறுத்துவதாக" தூத்துக்குடியைச் சேர்ந்த மோகன் உயர் நீதிமன்ற மதுரைக் கிளையில் மனு தாக்கல் செய்திருந்தார். இந்த மனு மீதான விசாரணை யின்போது, "ஸ்டெர்லைட் ஆலை வேண்டாம் என்பதே தமிழக அரசின் கொள்கை முடிவாக இருக்கும் நிலையில், அதே கருத்து கொண்டோரை துன்புறுத்துவது ஏன்? அரசின் நோக்கம் மக்களை பாதுகாப்பதா துன்புறுத்துவதா?" என்று நீதிபதிகள் கேள்வி எழுப்பியது குறிப்பிடத்தக்கது.

இது ஸ்டெர்லைட் ஆலை வேண்டாம் என்பதில் அரசு உறுதியாக இருக்குமா என்ற சந்தேகத்தை எழுப்புகிறது. காரணம், இதுபோலவே டெல்டா பகுதியில் ஹைட்ரோகார்பன் திட்டத்தை அனுமதிக்கமாட்டோம் என்று ஆட்சியாளர்கள் சொல்லிக்கொண்டே இருக்கும் நிலையிலேயே, அங்கே அதற்கான பல அனுமதிகள் மத்திய அரசால் வழங்கப்பட்டு, பணிகளும் தொடங்கி நடைபெற்று வருகிறது. நெல் நடுவை செய்யப்பட்டு தண்ணீர் தேங்கி நிற்கும் அந்த வயல் நடுவே, ஜேசிபி இயந்திரம் கொண்டு ஹைட்ரோகார்பன் திட்டத்துக்காக குழாய் பதிக்கும் பணிகள் மேற்கொள்ளப்படுகிறது. வாட்ஸ் அப், ஃபேஸ்புக், டிவிட்டர் என சமூக வலைதளங்களில் பகிரப்பட்ட அந்தப் படத்தைப் பார்த்தவர்கள் அனைவரும் பதறி இருப்பார்கள். இதற்கு மக்கள் கடுமையான எதிர்ப்பு தெரிவித்து போராட்டம் நடத்தி வருகின்றனர். இங்கேயும் மக்கள் உணர்வுக்கு எதிராக லாப நோக்கம் ஒன்றே குறிக்கோள் என இருப்பது வேதாந்தா நிறுவனம்தான் என்பது குறிப்பிடத்தக்கது.

நெடுவாசல், கதிராமங்கலம் என்று எத்தனை மக்கள் போராட்டங்கள் நடந்து அவ்வப்போது மீத்தேன், ஷேல்வாயு எடுக்கும் பணிகளை முடக்கி வைத்தாலும் ஹைட்ரோகார்பன் என்ற பெயரில் மீண்டும், மீண்டும் தமிழகத்தை அச்சுறுத்திக்கொண்டுதான் இருக்கிறது வேதாந்தா, ஓ.என்.ஜி.சி. போன்ற கார்ப்பரேட் நிறுவனங்களும் மத்திய அரசும். ஏற்கனவே, ஹைட்ரோ கார்பன் கிணறுகள் அமைக்க வேதாந்தா, ஓ.என்.ஜி.சி நிறுவனங்களுக்கு அனுமதி அளித்துள்ள மத்திய அரசு இப்போது சூழல் தாக்க மதிப்பீட்டு அறிக்கை அளிக்கவும் அனுமதி வழங்கியுள்ளது. இது இப்போது அந்த பகுதியில் வாழும் மக்கள், விவசாயிகள், சூழலியல் செயற்பாட்டாளர்கள் அனைவரையும் அதிர்ச்சியில் ஆழ்த்தியுள்ளது.

காவிரி டெல்டா, விழுப்புரம், கடலூர், புதுச்சேரி ஆகியப் பகுதிகளை இரண்டு மண்டலங்களாக பிரித்து மொத்தமாக 341 இடங்களில் ஹைட்ரோகார்பன் கிணறுகள் அமைக்க திட்டமிட்டுள்ளார்கள். இந்த கிணறுகள் பூமியின் 4500 கிமீ ஆழத்திற்கு அமைக்கப்படும். நிலப்பகுதிகள் மட்டுமின்றி கடல்பகுதியிலும் இந்த கிணறுகளை அமைக்க அனுமதி வழங்கப்பட்டுள்ளது. இப்போது முதல் கட்டமாக காவிரிப்படுகையின் கடற்கரைப் பகுதிகளில் இந்த பணிகளை தொடங்கியுள்ளனர்.

ஓ.என்.ஜி.சி 67 கிணறுகளும் வேதாந்தா 274 கிணறுகளும் அமைக்க உள்ளனர். இப்போது மொத்த கிணறுகளுக்கும் சுற்றுச்சூழல் ஆய்வு அனுமதி வழங்கியுள்ளனர். அவ்வாறு ஆய்வு அனுமதி வழங்கியவற்றில் கடலூர், நாகை கடற்பகுதிகளில் 40 கிணறுகளுக்கும், கடலூர் மாவட்டத்தின் புவனகிரி வட்டாரம் மற்றும் திருவாரூரில் உள்ள பெரியக்குடி வட்டாரம் ஆகியவற்றில் 27 கிணறுகளுக்கு ஓ.என்.ஜி.சி நிறுவனத்திற்கு ஒதுக்கப்பட்டுள்ளது. அதுபோல விழுப்புரம், புதுச்சேரி கடற்பகுதிகளில் 116 கிணறுகளுக்கும், நாகை, காரைக்கால் கடற்கரை பகுதிகளில் 158 கிணறுகளுக்கும் சூழல் தாக்க மதிப்பீட்டு ஆய்வு அறிக்கை தாக்கல் செய்ய வேதாந்தா நிறுவனத்திற்கு அனுமதி வழங்கப்பட்டுள்ளது.

இதுபோன்ற அபாயகரமான திட்டங்களுக்கு மக்களிடம் கருத்துக் கேட்பு நடத்திய பிறகுதான் இத்தகைய ஆய்வு அறிக்கையை அளிக்க வேண்டும். ஆனால், மக்களிடம் கருத்து கேட்பு நடத்தாமலேயே ஆய்வு அறிக்கையை சமர்ப்பிக்க முயற்சி எடுக்கிறார்கள். மக்களிடம் கருத்து கேட்பு கூட்டம் நடத்தாமல் ஒரு திட்டத்தை நடைமுறைப்படுத்துவது சட்டவிரோதமானது.

ஓ.என்.ஜி.சி., வேதாந்தா இரண்டு நிறுவனங்களுமே நிலப்பகுதி மற்றும் கடற்பகுதிகள் ஆகிய இரண்டிலுமே ஹைட்ரோகார்பன் கிணறுகளை அமைக்கின்றனர். இதற்காக மூன்று சுற்றுகளாக ஏலம் விடப்பட்டுள்ளது. முதல்சுற்று ஏலத்தில் கடலோரத்தில் உள்ள நாகை, காரைக்கால் பகுதிகள் வேதாந்தாவுக்கும், நிலப்பகுதிகளில் உள்ள கிணறுகள் ஓ.என்.ஜி.சிக்கும் கொடுக்கப்பட்டுள்ளது. இரண்டாவது மற்றும் மூன்றாவது சுற்று ஏலம் மே மாதம் 15ஆம் தேதி முடிவடைந்துள்ளது. ஒட்டு மொத்தமாக 6000 சதுர கிலோமீட்டருக்கும் மேலாக ஹைட்ரோகார்பன் கிணறுகள் அமைக்க ஏலம் விடப்பட்டுள்ளது. முதல் சுற்று ஏலம் விடப்பட்ட பகுதிகளில்தான் இப்போது சூழல் தாக்க மதிப்பீட்டு அறிக்கை தாக்கல் செய்ய அனுமதி வழங்கியுள்ளனர். ஜெயலலிதா முதல்வராக இருந்தபோது மீத்தேன் திட்டம் தொடர்பான பணிகளை முற்றிலுமாக அனுமதிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.



ஒரு ஹைட்ரோகார்பன் கிணறு அமைக்க மேல்மட்டத்தில் ஐந்து ஏக்கர் நிலம் தேவைப்படும் என்கிறார்கள். "அந்த நிலத்தின் வழியே *4500* கிமீ ஆழம் வரை கிணறு அமைக்கப்படும். ஒரு கிணறில் இருந்து *36* சதுர கிலோமீட்டர் பகுதிகளுக்கு குழாய்களை செலுத்தப்பட்டிருக்கும். இதுபோல ஒவ்வொரு பக்கமும் *3* கிலோமீட்டர் தூரத்துக்கு குழாய்களை செலுத்தியிருப்பார்கள். இதிலிருந்து மேலும் *3* கிலோமீட்டர் தூரத்துக்கு இதன் பாதிப்புகள் இருக்கும். ஒரு ஹைட்ரோகார்பன் கிணறுக்கு ஒரு வாரத்துக்கு ஒரு கோடி லிட்டர் தண்ணீர், பல டன் மணல் தேவைப்படும். அவை இங்கிருந்தே எடுக்கப்படும்.

மேலும், *634* வகை இரசாயனங்களை கிணறுகள் வழியே உட்செலுத்தி ஒரு செயற்கை பூகம்பத்தை உருவாக்கி நிலத்தடி தட்டுகளை உடைத்து ஹைட்ரோகார்பனை சேகரிப்பார்கள். இதனால், இந்த பகுதிகள் முழுவதிலுமுள்ள இலட்சக்கணக்கான ஏக்கர் நிலங்கள் பாதிக்கப்படும்" என்கிறார்கள் சூழியலாளர்கள்.

எனவே, தமிழக அரசு இந்த திட்டத்துக்கு உடனடியாக எதிர்ப்பு தெரிவித்து, இத்திட்டம் தொடர்பான ஆய்வுப் பணிகளுக்கு தடைவிதிக்க வேண்டும். விவசாயத்தை, விவசாயிகளை பாதுகாப்பதில் உறுதியுடன் இருக்க வேண்டும். ●

**தோப்பில் முஹம்மது மீரான்**
**(1944 - 2019)**

# இஸ்லாமிய வாழ்வியலின் அசல் பிரதி

**செ. சண்முகசுந்தரம்**

"இஸ்லாமும் இஸ்லாமியர்களும் இன்று உலகெங்கும் தவறாகப் புரியப்பட்ட மதமும் மக்களும் ஆகும். முஸ்லிம்களில் சிலர்கூட இஸ்லாத்தை அதன் உண்மையான பொருளில் சரிவரப் புரிந்துகொள்ளாமல் பல தவறான புரிதல்கள் உடையவர்களாகவே இருக்கின்றனர்."

-தோப்பில் முஹம்மது மீரான்

இஸ்லாத் குறித்தும் இஸ்லாமை வாழ்வியலாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டுள்ள இஸ்லாமியர்கள் குறித்தும் தனது எழுத்துகளின் வழி தமிழ் மக்களுக்குப் புரியவைத்த தோப்பில் முஹம்மது மீரான் எனும் எழுத்தாளுமை சமீபத்தில் காலமானார். நாஞ்சில் நாட்டின் இஸ்லாமிய வாழ்வியலை தனது எழுத்துகளில் வடித்தெடுத்தவர் அவர். இஸ்லாமியப் பண்பாடு என்பது அயல் கிரகத்துப் பண்பாடு என்று இப்பொழுதும் கருதிக் கொண்டிருக்கும் நம்மில் சிலருக்கு மத்தியில், இஸ்லாமியர்களின் வாழ்க்கையை, அதன் பல்வேறுபட்ட குணாதிசயங்களை, உள்ளது உள்ளபடியே எடுத்துக் காட்டியவர் தோப்பில்.

தான் சார்ந்த மதம் குறித்த தெளிவானப் பார்வையையும் மக்களின் வாழ்க்கை மீது அம்மதம் செலுத்திய தாக்கத்தின் மீதும் கூரான விமர்சன நோக்கை அவர் கொண்டிருந்தார். அதனால் தமக்கு என்ன நேருமோ என்று அவர் சோர்ந்து போய்விடவில்லை. அவரின் பல்வேறு எழுத்துகளும் சீர்திருத்த இஸ்லாமிய மாத சஞ்சிகைகளில்தான் தொடராக வெளிவந்திருக்கின்றன. இஸ்லாமிய சமூகத்திற்குள் சில முற்போக்கான எண்ணங்களை விதைத்துச் சென்றதில், சென்று கொண்டிருப்பதில் இவ்விதழ்களுக்கு ஆழமான பங்குண்டு.

தோப்பில் முஹம்மது மீரானின் முதல் நாவலான 'ஒரு கடலோரக் கிராமத்தின் கதை' யின் கதைகளமான தேங்காய்ப்பட்டணம் கிராமம்தான் அவருடைய சொந்த ஊர். நாஞ் சில் நாடு முழுவதும் கடலோரக் கிராமங்களில் இஸ்லாமியர்களின் குடியிருப்புகள் அதிகம். சுதந்திரத்திற்கு முன்னர் வரை திருவாங்கூர் சமஸ்தானத்தில் இணைந்திருந்தது நாஞ்சில் நாடு. பிரிட்டிஷ் இந்தியப் பகுதிகளைவிட திருவாங்கூர் மன்னர் சமஸ்தானத்தில் அடக்குமுறைகள் அதிகம். கல்வி வாய்ப்புகள் குறைவு. அதிலும் இஸ்லாமியர்கள் வசிக்கும் கிராமங்களில் மேலைக் கல்விக்கான வாய்ப்புகள் மிக மிகக் குறைவு. அக்கிராமங்களில் இஸ்லாமியப் பழமைவாதமே ஆட்சி புரிந்தது. மதராஸாக்கள் அதிகம். எங்கும் மதக்கல்வி. எனவே வைதீகம் சார்ந்த மூடநம்பிக்கைகளும் அதிகம். பேய்கள், ஜின்கள், பைத்தியங்கள் குறித்த கருத்தாக்கங்களும் புனைவுகளும் மிக அதிகம். தோப்பிலின் எழுத்துவழி இவைகளை நாம் வாசிக்கும்போதும் ஒருகாலத்தில் அறியாமையில் வாழ்ந்து வந்திருக்கும் அம்மக்களைக் குறித்து தெரிந்து கொள்ளும்போதும் நமக்கு வியப்பும் ஆச்சரியமும் பரிதாபமுமே ஏற்படுகிறது.



கடந்துபோன ஒரு நூற்றாண்டு கால இஸ்லாமிய வரலாற்றை தனது எழுத்துகளில் மிக அநாயசமாகக் கடத்திச் செல்கிறார் தோப்பில். அவிழ்க்கமுடியா அதன் கடின முடிச்சுகளை அவிழ்த்து நமக்கு அதன் இன்னொரு பகுதியைக் காண்பிக்கிறார். அதுவே வரலாறாகவும் போய்விடுகிறது. புனைவு கலக்கும்போது அதுவே நாவலாகவும் பரிணமிக்கிறது. தோப்பிலின் பேனா, காலம் என்னும் மையினால் எப்போதும் இட்டு நிரப்பப்பட்டுக் கொண்டே இருக்கிறது. அது என்றுமே தீர்ந்து போயிருக்கவில்லை.

மலையாள மொழிவழி கல்வி பெற்றிருந்தாலும்கூட தனது தாய்மொழி தமிழை சிறப்புறக் கற்று நமக்கு ஆறு நாவல்களையும் நூற்றுக்கும் மேற்பட்ட சிறுகதைகளையும் ஏராளமான நூல் மதிப்புரைகளையும் ஆக்கித் தந்திருக்கிறார் தோப்பில். தமிழ் மொழி மீதான, தமிழர்கள் மீதான அவருடைய நேசத்தை அவருடைய எழுத்துகளில் நாம் காணலாம். மதரஸா போர்டில் அரபிக்கு பதிலாக தமிழை எழுதிய மாணவன் ஐதுரூஸை பிரம்பால் நொறுக்கும் மோதின் லெப்பை குறித்து ஒரு கடலோர கிராமத்தின் கதையில் எழுதியிருப்பார். செய்யக்கூடாத ஒரு பாவத்தைச் செய்ததைக் கேட்டது போல ஒரு நடுக்கம் மோதினுக்கு ஏற்பட்டது என அவர் எழுதுவார். மோதின் கேட்பார்: "இறைவனின் திருவேதத்திலுள்ள வசனங்களை எழுதும் போர்டில் காபிர்களின் மொழியை எழுதுவதா?". இப்போது மதரஸாக்களில் மட்டுமில்லை, தமிழகத்தின் பெரும்பாலான பள்ளிக்கூடங்களிலும் தமிழ் ஒரு காபிர் மொழியாகவே இருந்து வருகிறது. தமிழில் பேசுவதற்கும் எழுதுவதற்கும் தமிழ்ச் சிறார்கள் வெட்கப்படுவதையும் நாம் பதிவு செய்யவேண்டும்.

கடற்புறமும் அதன் இயற்கைச் சூழலும் அங்கு வசிக்கும் மனிதர்களும் அவர்களின் குண இயல்புகளும் மீன் வாசமும் மக்களின் வறுமையும்தான் தோப்பிலின் கதைகளில் ஜொலிக்கும் முத்துகள். கடலின் இயற்கை அழகைக்கொஞ்சி எழுதும் தோப்பில், அதன் கரைகளில் வாழும் மக்களின் அன்றாட வாழ்க்கைப் பக்கங்களையும் மிக அழகாகவே எழுதியிருப்பார். கதைமாந்தர்களின் எளிய வாழ்க்கைமுறைகளை சொல்லிச் செல்லும் தோப்பில், அவர்களை நம் மனசோடு உலவவிடும் வல்லமை பெற்றவராகவும் இருப்பதுதான் சிறப்பு. அசனார் லெப்பையின் சில அசட்டுத்தனமான செயல்களை,

அவருடைய வறுமையோடுதான் ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளவேண்டும். தோப்பில் படைக்கும் பாத்திரங்கள் நமக்கு சில வேளைகளில் சுவாரசியமானவையாகவும் சில வேளைகளில் அவர்களின் மீது வெறுப்பை உமிழவேண்டும் என்கிற வேட்கையை நம்மிடம் ஏற்படுத்துபவையாகவும் இருக்கும்.

இஸ்லாமிய சமயப் பிரதிகளில் பெண்கள் குறித்த நிலைப்பாடு எவ்வாறு வரையறுக்கப்பட்டிருக்கிறது என்பதில் மாறுபட்ட கருத்துகள் இருந்தபோதிலும் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னரான இஸ்லாத் சமுதாயத்தில், பெண்களின் இருப்பும் அவர்களின் மீதான வெறுப்பும் அவர்கள் அனுபவிக்கும் துன்பமும் அவர்களின் அறியாமையும் தோப்பிலின் நாவல்களில் சொல்லப்பட்டுள்ள விதம் எவரையும் உருகச் செய்யும். சாய்வு நாற்காலியின் மரியமும் துறைமுகத்தில் கதீஜாவும் ஒரு கடலோர கிராமத்தின் கதையில் நூஹூபாத்துமாவும் ஆயிஷாவும் இன்னமும் நம் கண்களில் நடமாடிக்கொண்டே இருப்பவர்கள்.

தோப்பில் என்றுமே இஸ்லாம் மதப்பிரதிகளை கேள்விக்குட் படுத்தியதில்லை. அதன் வைதீகத்தன்மையை, அதன் சடங்குகளை, இஸ்லாம் பெயரிலான மூடநம்பிகைகளை அவர் என்றும் சகித்துக் கொண்டதில்லை. இஸ்லாத்தின் சடங்கார்த்தங்களில் பெரிய பங்கினை வகிக்கும் ஜின்கள், பேய், பிசாசுகள் பற்றிய கற்பனையை அவர் உடைக்கிறார்.

ஒரு பாழடைந்த வீட்டில், ஒரு இளம்பெண் தூக்கில் தொங்கிய அவ்வீட்டில், ஊர் மக்களால் வெளியேற்றம் செய்யப்பட்ட மீரான் பிள்ளையின் குடும்பமான காசீம் தனது அம்மா, தங்கையோடு குடியேறுகிறான் என்பதை 'துறைமுகம்' நாவலில் தோப்பில் சொல்லியிருப்பார். வெளியூர் செல்லும் மீரான்பிள்ளை, இரவு வெகுநேரம் ஆகிவிட்டதால் தன் ஊருக்கு நடந்தே வருகிறார். பேய் நடமாட்டம் இருப்பதாகச் சொல்லப்படும் இடத்தைக் கடக்க பயம் கொள்ளும் மீரான்பிள்ளை, பின்னர் சக தொழிலாளிகளோடு அவ்விடத்தைக் கடக்கிறார்.

மதம் என்கிற பெயரில் செய்யப்படும் மூடநம்பிக்கைகளை, தனது பாத்திரங்களின் மூலம் தோப்பில் நிராகரிக்கிறார். அதைபோலவே இஸ்லாம் என்கிற சாயம் பூசி உலா வரும் போலிச் சமயவாதிகளையும் தோப்பில் தோலுரிக்கிறார். ஒரு கடலோர கிராமத்தின் கதையில் உலவும் தங்ஙள் முஸ்லியார்செய்யும்அயோக்கியத்தனங்களைதோப்பில் அடையாளம் காட்டுகிறார். எல்லா சமயங்களிலும் கடவுள் பெயரைச் சொல்லி பிழைப்புவாதம் செய்யும் கும்பல்கள் மிகுதியாக உலவும் இன்றைய சூழலில், "ஒரு கடலோர கிராமத்தின் கதை"யின் தங்ஙளும் "துறைமுக"த்தின் முகமது அலிகான் இப்னு ஆலிசான் முஸ்லியாரும் முக்கியமான படைப்புகள். மக்களை விழிப்புணர்வு கொள்ளச்செய்யும் பாத்திரங்கள்.

திருடனாக வாழ்க்கை நடத்தி, முப்பது ஆண்டுகளுக்கு முன்பு ஊரைவிட்டு ஓடிய ஒருவன், அறியாமை மிகுந்த மக்களை, மதத்தின் பெயரைச் சொல்லி ஏமாற்றி வஞ்சக வாழ்க்கை நடத்தி வந்த முகம்மது அலிகானை தோப்பில் அம்பலப்படுத்துகிறார். ஊரிலிருந்து ஓடிச்சென்றதிலிருந்து, நாகூர் தர்ஹாவில் தவமிருந்தது, பின்னர் அஜ்மீர் சென்று சேர்ந்தது, பின்னர் ஒரு நொடியில் அஜ்மீரிலிருந்து ஊர் வந்து சேர்ந்தது என்று அவர் விடும் கதைகள்தான் எத்தனை எத்தனை. இறுதியில் நிக்காஹ் அன்று இளம் பெண்ணை ஏமாற்றி எல்லா நகைகளையும் எடுத்துக்கொண்டு தலைமறைவானதையும் இது குறித்து ஊர் முதலாளி பரீத்துப் பிள்ளையிடம் கேள்வி கேட்கப்போன அவள் தந்தை பொடிக்கண்ணுவுக்கு நேர்ந்த அவலத்தையும் தோப்பில் தனக்கேயுரிய கதை சொல்லல் பாணியில் விவரிக்கிறார்.

தோப்பிலின் கதைகள் எல்லாவற்றிலும் இடம்பிடிப்பது தீப்பெட்டியும் அதனுள் அடக்கி வைக்கப்பட்டிருக்கும் துண்டு பீடியும். ஒரு ஏழைக் குடியானவனின் அத்தியாவசியப் பொருட்கள் இவை. சிலசமயங்களில் அதுவே அவனுடைய பசியையும் ஆற்றவல்லது. சில நேரங்களில் அத்தீப்பெட்டிக்குள் ஒரு சிறு தீக்குச்சியும்கூட இருப்பதில்லை. வறுமையின் உச்சத்தைக் காண்பிப்பதற்கு தோப்பிலை விட்டால் வேறு யார் இருக்கமுடியும்?

அதைப்போல தொந்தி வயிற்றைக் குறிக்க அவர் அடையாளப்படுத்தும் சொல், குடவண்டி. அவருடைய நாவல் முழுக்க விரவி நிற்கும் நாஞ்சில் நாட்டு வட்டாரச் சொற்களும் இஸ்லாமிய சமயம் சார்ந்த சொற்களும் நாவலின் வாசிப்பில் தடையை ஏற்படுத்துவதில்லை. மாறாக நாவலின் மொழிவளத்தைக் கூட்டவே செய்கின்றன. தோப்பிலின் எழுத்துகளில் இஸ்லாமிய வாழ்வியல் இருக்கிறது. மூட நம்பிக்கைகளைத் தகர்க்கும் கருத்தியல்கள் இருக்கிறது. அதற்கும் மேலாக அறியாமையில் தகிக்கும் மக்களை நத்திப் பிழைக்கும் ஊர் முதலாளிகளின் அதிகார மையங்களை அவர் கேள்விக்குட்படுத்திக் கொண்டே இருக்கிறார்.

துறைமுகத்தின் கொழும்பு முதலாளி ஈ.பீ.கு ஆகட்டும், முஹல்லத் தலைவர் பரிது பிள்ளை ஆகட்டும், கடலோர கிராமத்தின் கதையில் வரும் அகமதுகண்ணு முதலாளி ஆகட்டும், பள்ளிவாசலின் பெயரைச் சொல்லி, இஸ்லாத் பெயரைச் சொல்லி, தனக்கு ஆமாம் சாமி போடும் கூட்டத்தையும் அடியாட்கள் பலத்தையும் துணை கொண்டு, மூட நம்பிக்கைகளின் துணையுடன், மக்களின் எழுத்தறிவின்மையின் ஆதரவுடன், சாதாரண அப்பாவி மனிதர்களின் மீது சவாரி செய்யும் இவர்களது நடவடிக்கைகளை தோப்பில் தனது எழுத்துகளில் கூர்மையாக வெளிப்படுத்துகிறார்.

சமயத்தின் பெயரைச் சொல்லி மக்களைச் சுரண்டும் கூட்டம் உலகில் எங்கு சென்றாலும் ஒரே தன்மையுடனேயே வலம் வருகிறார்கள். அவர்களுக்குத் தேவை அதிகாரம். மக்களின் அறியாமையும் பொய்யும் புரட்டும் மதச் சாயங்களும் அவர்களுக்கான எரிபொருள். அதனால்தான் மக்கள் விழிப்புணர்வு பெறுவதைமுதலாளிகளும் ஆதிக்கவாதிகளும் என்றுமே விரும்புவதில்லை. அதனால், மதப்பிரதிகளில் இல்லாத கருத்துகளை, மோதின்களின், போலி ஹாஜியார்களின் உதவியுடன் அவைகள் சமயக் கருத்துகள் என உருவேற்றப்பட்டு சாதாரண மக்களை கேள்வி கேட்ப திலிருந்து அவர்களை தடுத்து நிறுத்திவிடுகிறார்கள்.

மேலைக்கல்வி (ஆங்கிலக் கல்வி) முறையும் (ஒரு



கடலோரக் கிராமத்தின் கதை), ஆண்கள் கிராப் வெட்டிக் கொள்ளுதலும் (துறைமுகம்) இப்படித்தான் தடுக்கப்படுகின்றன. அப்படியென்றால் ஜின்னா இஸ்லாமியர் இல்லையா என்கிற கேள்விக்கு ஆமாம் என்ற பதிலைச் சொல்லும் முதலாளி, பிறிதொரு இடத்தில் முஸ்லிம் லீக்குக்கு ஆதரவாகப் பேசும்போது ஜின்னா பத்தரை மாத்து தங்கம் என்றும் சொல்கிறார்.

புன்னப்புரா போராட்டம் குறித்தும் திருவாங்கூர் சமஸ்தானத்து மன்னர் அரசதிகாரம் மக்களை எப்படி வதைத்தெடுத்தது என்பது குறித்தும் 'துறைமுகம்' நாவலில் வரலாறும் பேசுகிறார் தோப்பில். இஸ்லாமிய அடையாளங்களோடு தெருவில் உறங்கும் மம்மதாஜியை போலீஸ்காரர்கள் இரவில் பிடித்துச் செல்கிறார்கள். அது குறித்த விழிப்புணர்வற்ற நிலையில் இருக்கும் மக்கள், அதிகாரத்தின் பிடியில் அவர் நெறிபட்டு உயிர்துறப்பது குறித்து கேலியும் கிண்டலும் செய்யும் ஊர் மக்களின் அறியாமையின் ஆழம் குறித்து அடையாளம் காட்டுகிறார் தோப்பில். நக்சலைட்டுகள், பகத்சிங் குறித்தெல்லாம் துறைமுகத்தில் வாசிக்கும்போது தோப்பிலின் சிந்தனையின் வீச்சு நமக்குப் புலப்படுகிறது.

மஹ்மூத்தும் காசீமும் தோப்பில் படைத்திட்ட இரு முக்கிய கதாபாத்திரங்கள். இப்பாத்திரங்களின் மூலமே தோப்பில் தனது கருத்துகளை உலவவிடுகிறார். பள்ளிக்கூடம் கட்ட அகமதுகண்ணு முதலாளி இடம் தர மறுப்பதும் தனது மகளின் திருமணத்திற்காக வைத்திருந்த நிலத்தை அப்பள்ளிக்கூடம் கட்டுவதற்காக மஹ்மூத் அரசுக்கு வழங்குவதும் அகமதுகண்ணுவின் தூண்டுதலினால் மஹ்மூத் ஊர் விலக்கம் செய்யப்படுவதும் எதற்கும் அஞ்சாத மஹ்மூத் ஊராரின் ஒத்துழைப்பின்றியே தனது மகளுக்கு நிக்காஹ் செய்விப்பதும் தோப்பிலின் புரட்சிகர எழுத்துகள் (ஒரு கடலோர கிராமத்தின் கதை). அதுபோலவே பரீது பிள்ளைக்கெதிரான காசீமின் எதிர்நடவடிக்கைகளும் அவனுடைய அரசியல் ஆளுமையும் போராட்ட ஆளுமையும் ஊர் முழுதும் காலரா பாதிக்கப்பட்டபோது மக்களுக்காக அவன் செய்யும் சேவைகளும் தோப்பிலின் செதுக்கலான எழுத்துகள்.

தோப்பிலின் நாவல்களில் காதலையும் காமத்தையும் நாம் உய்த்துணரலாம். பரீது, ஆயிஷா காதலை தோப்பிலைவிட உருக்கமாக வேறு யார்தான் எழுதியிருக்க முடியும்? ஆயிஷாவின் திருமண வாழ்க்கை நிராசையில் போனபிறகு பரீதின் மீது ஆயிஷாவிடம் துளிர்க்கும் காதலையும் காமத்தையும் மிகச்சரியாகக் கையாண்டிருப்பார் தோப்பில். அதுபோல சாய்வு நாற்காலியின் முஸ்தபாகண்ணுவின் காமமும் கடலோரக் கிராமத்தின் கதையின் தங்ஙளின் லீலைகளும் மறக்கமுடியாதவை.. கதைக்களனுக்கு வலுசேர்ப்பவை. மாறாக சாய்வு நாற்காலியின் மரியமும் கடலோர கிராமத்தின் நூஹூபாத்துமாவும் ஆயிஷாவும் துறைமுகத்தின் கதிஜாவும் அற்புதமான பெண் படைப்புகள் என்று இஸ்லாமிய ஆண் சமுதாயம் பேசலாம். ஆனால், அவர்கள் வீறுகொண்டு எழவேண்டியவர்கள். எல்லாவித அடிமைத்தனங்களையும் எதிர்த்து குரல் கொடுத்திருக்க வேண்டியவர்கள்.

இஸ்லாமிய சமூகம் மூடநம்பிக்கைச் சடங்காச்சாரங்களிலிருந்து விடுபடவேண்டும் என்பதே தோப்பிலின் சதா சிந்தனையாக இருந்து வந்திருக்கிறது. இஸ்லாமியச் சமூகத்தின் வாழ்வியலில் சீர்திருத்தம் வேண்டும் எனக் கோரி நிற்பவர் தோப்பில். சீர்திருத்தக்காரர், பழமைவாதத்தை முற்றிலும் எதிர்ப்பவர். தனது எழுத்துலகின் தொடக்கக் கட்டத்தில் வகாபியிசம் நோக்கிய சாய்மானம் அவருக்கு இருந்த காரணத்தினால்தான் பழமைவாதிகளின் தொல்லைகளிலிருந்து விடுபட்டு அவர் நெல்லையில் குடியேறினார் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். தனது வாழ்வின் பிற்காலத்தில் வகாபியிசம் இஸ்லாம் சமூகத்தில் ஏற்படுத்திய சமய வரட்டுவாததைப் புரிந்துகொண்டவர். பல பத்தாண்டுகளுக்கு முன்புவரை இஸ்லாமிய வாழ்வியலில் இரண்டறக் கலந்திருந்த சடங்காச்சாரங்களிலிருந்து மக்களை விடுவிக்கவேண்டும் என்ற உந்துதல் அவருடைய எழுத்துகளில் மிக அதிகமாக இருந்து வந்திருக்கிறது. அதே நேரத்தில் நபிகள் குறித்தும் இஸ்லாத்தின் பிரதிகளான ஹதீஸ்கள் குறித்தும் அவர் என்றும் கேள்வி எழுப்பியதில்லை. மக்களை அறியாமையிலேயே வைத்திருக்கும் சமயச்சடங்குகளை எதிர்த்து வந்திருக்கும் அதே சமயம் அம்மக்களின் வறுமைக்குக் காரணமாகத் திகழ்ந்த பணக்காரர்களின் போக்கிரித்தனங்களையும் தொடர்ந்து தனது எழுத்துகளில் அம்பலப்படுத்துகிறார். அது ஒரு கடினமான பணி.

இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் இஸ்லாம் சமூகத்தின் வீழ்ச்சியை அவதானித்த இஸ்லாமிய அறிஞர் பெருமக்கள் பலரும் இஸ்லாமியர்கள் கல்வி கற்கும் அவசியத்தை பரப்புரை செய்தனர். அலிகார் முஸ்லிம் பல்கலைக்கழகம் அப்படித்தான்

தொடங்கப்பட்டது. அதன் தொடர்ச்சியாகத்தான் ஊரில் அரசுப் பள்ளிக்கூடமும் தொடங்கப்பட்டு, மஹ்பூப்கான் என்னும் இஸ்லாமியரும் அங்கு ஆசிரியராகப் பணிபுரிய வருகிறார். மக்களின் மூட நம்பிக்கையும் அகமதுகண்ணு முதலாளியின் சூழ்ச்சியும் மஹ்பூபின் முயற்சியை நாசம் செய்கிறது. இறுதியில் பள்ளிக்கூடமும் எரியூட்டப்படுகிறது என்பதை தோப்பில் மிகவும் ஆக்ரோசத்தோடு கதையை நகர்த்திச் செல்கிறார் (ஒரு கடலோர கிராமத்தின் கதை). ஊரின் பணக்கார முதலாளிகள் தங்களின் அதிகாரத்தைத் தக்கவைத்துக்கொள்ள வருங்கால சந்ததியினரும் இதுகாறும் அடக்கி ஒடுக்கப்பட்டு வாழ்ந்துவரும் மக்களின் குழந்தைகளும் கல்வி அறிவைப் பெற்றுவிடக்கூடாது என்பதில் மிக கவனமாக இருந்து வந்திருக்கின்றனர். அதுபோலவே துறைமுகத்தில் காசிமும் தனது பள்ளிப் படிப்பை போராடித்தான் பெறமுடிகிறது. அதன் தொடர்ச்சியாக விடுதலைப் போராட்டம் குறித்த அறிவையும் பெறமுடிகிறது.

கடந்த ஐம்பதாண்டுகளில் இஸ்லாமியப் பெண்களின் சமூகப் பாத்திரம் குறித்து ஆய்வு செய்தோமானாலும் நாம் தோப்பிலின் பிரதிகளையே பெரிதும் சார்ந்திருக்க வேண்டியிருக்கும். இஸ்லாமியப் பெண்கள் குறித்த மிகைப்படுத்தல்கள் அவரது எழுத்துகளில் இல்லை. இஸ்லாமிய ஆண்களின் மேல் கட்டப்படும் காமசூத்ரன்கள் பட்டங்களும் அதில் இருக்காது.

இஸ்லாமியப் பெண் எழுத்தாளரான சல்மாவின் ‘இரண்டாம் ஜாமங்களின் கதை’ நாவலுக்கு விமர்சனம் எழுதிய தோப்பில் (தீராநதி, 2006, ஜனவரி), சல்மாவின் எழுத்துகள் இஸ்லாமிய ஆண்களுக்கு எதிரானதாகவும் இஸ்லாமியப்பெண்கள் குறித்த மதிப்பீடுகள் நடுநிலைமை தவறி எழுதப்பட்டிருப்பதாகவும் விமர்சித்தார். அதே நேரத்தில் “இந்த நாவல் முன்வைக்கும் சமூக விமர்சனங்கள், பெண்களின் உள்ளத்திலிருந்து எழுகின்ற கேள்விகளாக ஒலிக்கின்றன” என்று சல்மாவைப் பாராட்டவும் அவர் தயங்கவில்லை. ‘இஸ்லாமிய சமூகம் ஒருபூடகப்படுத்தப்பட்டுள்ள சமூகம்‘ என்று எழுதியுள்ள அந்நாவலின் முன்னுரையாளரையும் தோப்பில் சாடுகிறார். இஸ்லாமிய சமூகம் அடைகாக்கும் மௌனம் குறித்து ஏற்கனவே நிறைய இஸ்லாமிய எழுத்தாளர்கள் எழுதியாகிவிட்டது என்கிறார் தோப்பில்.

தோப்பிலின் நாவல்கள் வரலாறையும் பேசுமாதலால், முதல் உலகப்போர் காலத்திலிருந்தே தென் தமிழகத்தில் நிலவிய சமய நல்லிணக்கத்தை அறிந்துகொள்ளமுடியும். கடலோரக் கிராமங்களில் வாழ்க்கை நடத்திய மீனவ குல மக்களோடும் நாடார் இன மக்களோடும் இஸ்லாமிய மக்களின் இணக்கத்தை நாவல் நெடுக நாம் காணமுடியும்.

தோப்பில் முஹம்மது மீரான், தான் வாழ்ந்த காலத்தில் சாகித்ய அகாதெமி விருதைப் பெற்றிருக்கிறார். ஆனால், அந்த அங்கீகாரம் மட்டும் அவருக்குப் போதுமானதா? இல்லை. மலையாள மொழியின் ஜாம்பவனான பஷீர்தான் அவரது ஆதர்சம். கேரளத்தில் பஷீருக்குக் கிடைத்த அங்கீகாரம் தோப்பிலுக்கும் தரப்பட்டிருக்க வேண்டும். இனியாவது



தரப்படவேண்டும் என்பதே தமிழ் எழுத்துலகின் எதிர்பார்ப்பு.

“என்னுடைய ஆறாவது நாவல் இது” என்று குடியேற்றம் நாவலின் என்னுரையில் சொல்லி யிருப்பார் தோப்பில். இதுவே இறுதி நாவலாகவும் அமைந்துவிட்டது. சமீபத்தில்தான் இந்நாவலைப் படித்தேன். 1498 முதல் 1663 வரையான காலக்கட்டத்தில் பறங்கியரை எதிர்த்த தமிழ் மரைக்காயர்களின் போராட்ட, வீர வரலாறை மையப்படுத்தியும் அவ்வீரர்களின் தற்கால சந்ததிகளின் ஒரு பிரிவினர் வாழும் துன்பியல் வாழ்வையும் தோப்பில் மிக அழகாக தனக்கேயுரிய எழுத்து நடையில் விவரித்திருப்பார். பெரியதம்பி மரைக்கார் பெத்தப்பா, மகன் சின்னதம்பி மரைக்கார் பெத்தப்பா...அவர்களின் போராட்ட வரலாறையும் தற்கால வரலாறையும் அடுத்தடுத்த அத்தியாயங்களில் பின்னிப் பிணைந்து கதையை நமக்குச் சொல்லிச் செல்வதில் அவருக்கு நிகர் அவரே. இஸ்லாமியர்கள் அந்நியர்கள் என்று புலம்பும் நபர்களும் தமிழுக்கும் இஸ்லாத்துக்கும் என்னப்பா சம்பந்தம் என்பவர்களும் அவசியம் வாசிக்கவேண்டிய எழுத்துகள் அவருடையவை.

“தமிழன் தன்மானம் இழந்துவிட்டான்டா” என்ற பெரியதம்பி மரைக்கார் பெத்தப்பாவின் குரல்தான் எனக்கு இன்னமும் ஒலித்துக்கொண்டிருக்கிறது.

தோப்பிலுக்கு என் கண்ணீர் அஞ்சலி. ●

**செ.சண்முகசுந்தரம்**
**<c.shanmughasundaram@gmail.com>**

44-ஆம் பக்கம் தோப்பில் முஹம்மது மீரான் சிறுகதை...

# டி. கண்ணன் கவிதைகள்

மிக இனிமையான ராகம்
என ஒன்று உண்டா?
இருக்கிறதா?
அல்லது இனிமேல்தானா?
காக்கையின் குரலை
இன்னும் மேம்படுத்த முடியுமா...
உலகின் வேகமாக ஓடும்
குதிரை
இருக்கிறதா?
இறந்துவிட்டதா அல்லது
இனிமேல்தான்
பிறக்கப் போகிறதா?
இந்த கோடையில்
வெயில் மிக அதிகம்

## வட்டு

புதுமைப்பித்தனை படித்த பிறகு
பலரும்
கடவுளை
வட்டாட அழைத்தனர்
வந்தார் இல்லை கடவுள்
பித்தனை படித்திராத (கேட்ட)
சிறுமி ஒருத்தி
வட்டாட அழைத்தது கடவுளை
வந்தார் கடவுள்
ஆட்டம் தொடங்கியது
சாணித் தரையில் குந்தி அமர்ந்தார்
கடவுள்
முதலில் ஆடிய சிறுமி சப்பை வைத்தது
சப்பை என்று கத்தினார் கடவுள்
கோபித்துக்கொண்டு சென்றுவிட்டது
குழந்தை
இன்றும்



குந்திய நிலையில்
தலையில் இரு கைகளையும்
வைத்துக்கொண்டு
அமர்ந்து கொண்டிருக்கிறார்
கடவுள்
எப்படி முடிப்பது என
தூணில் போராடிக்
கொண்டிருக்கிறார்கள்
சிற்பிகள்

## பின்னிரவின் முன்னிரவில்

அந்த மோசமான இரவைக் கடக்க
சாலையில் வேகமாக நடந்து கொண்டிருந்தான்
இவன்
சாலையின் எதிர் திசையில்
நடந்து வந்து கொண்டிருந்தவன்
இவனைப் பார்த்து
இரவைக் கடக்க விரைந்து கொண்டிருக்கிறீர்களா?
எனக் கேட்டான்
‘ஆம்’ என்றான் இவன்
அதற்கு எதிர் திசையில்
அல்லவா
பயணிக்க வேண்டும் என்றான்
அவன் ●

டி. கண்ணன் <krishnaswamy164@gmail.com>

# சோஃபியா அப்போதும் ஏன் அழுதாள்?

**சாதனா**
**ஓவியம்: Oswaldo Guayasamín**

குரோசியாவாக வேடமிட்டிருந்த சோஃபியாவின் கண்களுக்குக் கீழாகச் சற்றுக் கறுத்திருந்தது. அதை மறைப்பதற்காக பவுடரை ஒற்றி ஒற்றி எடுத்தாள். கூர்ந்து கவனித்தபோது அப்போதும் கருமை தெரிவதாகவே அவளுக்குப் பட்டது. பாதங்களினால் தன்னைத்தானே எழுப்பி கண்ணாடிக்கு அருகாக முகத்தைக் கொடுத்தவள், விரல்களினால் கண்களுக்குக் கீழாக வருடினாள்.

அவளுக்கு அழுகை வந்தது. மேசையில் கைகளை ஊன்றிக்கொண்டு அழத்தொடங்கினாள். பின், சட்டென்று அழுகையை நிறுத்திக்கொண்டவள், நிமிர்ந்து கண்ணாடியைப் பார்த்தாள். அவள் அழுத அழுகையின் கண்ணீரானது அவள் முகத்தில் போடப்பட்டிருந்த ஒப்பனையை சற்றுக் கலைத்திருந்தது. கைகளினால் தேய்த்து ஒப்பனையைச் சரி செய்தவள், தன்னைத் தானே மேலிருந்து கீழாகப் பார்த்துக்கொண்டாள். தான் அணிந்திருந்த அந்த நீண்ட வெள்ளை நிறப் பாவாடை சற்று தூக்கியிருப்பது போல் தோன்றவே அதைக் கைகளால் தேய்த்து எடுத்தாள். அப்போதும் தூக்கிக் கொண்டுதான் இருந்தது.

சுவரில் பொருத்தப்பட்டிருந்த கடிகாரத்தில் நேரத்தைப் பார்த்தாள். இன்னும் இரண்டு நிமிடங்கள்தான் இருக்கிறது. சற்றுத் தாமதித்தாலும் படுகேவலமான தூசண வார்த்தைகளால் பவுல்விச் திட்டுவான். அவனுக்கு எல்லாம் நேர்த்தியாகவும் நேர ஒழுங்கோடும் இருக்க வேண்டும்.

ஒரு பரபரப்போடு அந்த மிகச்சிறிய ஒப்பனை அறையைவிட்டு வெளியேற நினைத்தவள், என்ன நினைத்தாளோ... மறுபடியும் வேகமாய் ஓடி வந்து, கண்ணாடிக்கு முன் நின்றுகொண்டு தன்னை முழுவதுமாய் பார்த்தாள். திருப்தியாய் படவே கணுக்கால் வரை நீண்டிருந்த பாவாடையை தன் இரண்டு கைகளினாலும் தூக்கிக்கொண்டு அந்த அறையைவிட்டு வெளியேறலானாள்.



வெளியே, சோஃபியாவைக் கண்டதும் பவுல்விச் சற்று முகம் மாறினான். “இப்போதுதான் வருகிறாயா; போன வாரமே நான் உனக்கு அறிவுறுத்தியிருந்தேன் அல்லவா?” என்றான்.

அவ்வளவு சீக்கிரம் பவுல்விச்சை சோஃபியா எதிர்பார்க்கவில்லை. தாமதத்திற்கு ஏதாவது காரணம் சொல்லித்தான் ஆகவேண்டும். இல்லையென்றால் விடமாட்டான். “மன்னித்துவிடுங்கள்... திரு. பவுல்விச் நகோவ், தாமதமாக வரவேண்டுமென நான் ஒருநாளும் விரும்பியதில்லை. ஆனால், என்னுடைய புறச்சூழல் சொல்லிக்கொள்ளும்படியில்லை. அதுவே என் இன்றைய தாமதத்துக்கும் காரணம்” என்றாள். சோஃபியா அவ்வாறு சொல்லும்போது அவள் கண்கள் பவுல்விச்சையே பார்த்துக்கொண்டிருந்தன.

ஆனால், சோஃபியா கூறியதை பவுல்விச் செவிமடுத்தானில்லை. அவன், தன்னுடைய கைகளிலிருந்த நாடகம் எழுதப்பட்டிருந்த பிரதிகளைச் செப்பனிடுவதிலேயே குறியாக இருந்தான். அப்படிச் செப்பனிடும்போது அவன் உதடுகள் துடித்துக்கொண்டிருந்தன. அவன் ஏதோ கோபத்திலிருக்கிறான் என்பதை சோஃபியா உணர்ந்துகொண்டாள். தான் கூறிய காரணத்தை அவன் ஒருபோதும் நம்பப் போவதில்லை. நான் பொய் சொல்வதாகவே அவன் நினைப்பான். ஏற்கனவே கோபத்திலிருக்கும் அவன் இதனால் இன்னும் எரிச்சல்படக் கூடும். ஆகவே, இப்போதைக்கு இந்த இடத்தைவிட்டு நகர்ந்துவிடுவதுதான் சரியென்று அவளுக்குத் தோன்றிற்று.

பவுல்விச்சை விட்டு விலகி அப்பால் நடந்தாள். அப்படி விலகிச் செல்லும்போது பவுல்விச் தன்னை மறுபடியும் அழைத்துவிடுவானோ என அச்சமடைந்தாள். நல்லவேளையாக... பவுல்விச் அவளை மறுபடியும் அழைக்கவில்லை. ஆறுதலடைந்த சோஃபியா திரைச்சீலையை விலத்தி மேடையை அடைந்தாள்.

மூன்றாவது வாரமாகவும் ‘குரோசியாவும் வேலைக்கார பெண்களும்‘ நாடகம் இன்று அரங்கேற்றப்படுகிறது. ‘Croatie et femmes servantes’ என்ற ஃபிரெஞ்சு மொழியில் எழுதப்பட்ட நாடகத்தையே அவர்கள் ரஷ்ய மொழியில் மொழிபெயர்த்திருந்தார்கள். கதையின்படிக்கு சோஃபியா எஜமானி. அதாவது குரோசியா. அக்லேயாவும் ஸென்னியும் குரோசியாவின் வேலைக்காரப் பெண்கள். சோஃபியாவை கண்டதும் அக்லேயாவும் ஸென்னியும் புன்னகைத்துக் கொண்டார்கள். அவர்கள் ஏற்கனவே தங்களை தயார்படுத்தியிருந்தார்கள். அவர்கள் இருவரும் வெள்ளைநிறத்திலான கவுணொன்றையும் அதை மூடினாற்போல் நீல நிறத்திலான அங்கி ஒன்றையும் காலுக்கு முழங்கால் வரை நீண்டிருந்த காலுறைகளையும் கருப்பு நிறச் சப்பாத்துக்களையும் அணிந்திருந்தார்கள். இருவரின் தலைகளிலும் வேலைக்காரிகள் அணியும் தொப்பி.

ஸென்னி அன்று மிதமிஞ்சிய அழகுடன் இருப்பதுபோல் சோஃபியாவுக்குப் படவே, அதை அவளிடம் கூறினாள். புன்னகைத்துக்கொண்டவளான ஸென்னி, “நன்றி” என்றாள். ஸென்னி சோஃபியாவின் நல்ல தோழிகளில் ஒருத்தி என்று சொல்லிவிட முடியாது. ஆனால், அக்லேயாவுடன் ஒப்பிடும்போது ஸென்னி நல்லவளென்று சோஃபியா நினைத்தாள். ஆகவே, தன்னுடைய பாடுகளனைத்தையும் ஒன்றுவிடாமல்

நாடகத்தின் இடையில் கிடைக்கும் ஓய்வு நேரங்களிலும் அல்லது நாடகம் முடிந்து திரும்பும்போதும் அவளிடம் கூறுவாள். சோஃபியா மீது இரக்கம் கொள்பவளான ஸென்னி, ஆறுதலான வார்த்தைகளையும் சர்ந்தப்பம் கிடைக்கும்போது அவளின் உச்சம் தலையில் முத்தமிடுபவளாகவும் இருந்தாள்.

அப்போது மேடையில் நுழைந்தவனான பவுல்விச், முகத்தை தீவிரமாக வைத்துக்கொண்டு, "எல்லாம் சரியாகத்தானே இருக்கிறது; வார்த்தைகள் எப்படி... நினைவில் நிற்கிறனவா?" என்றான். பெண்கள் மூவரும் பரபரப்பாகி பின்னர் ஆமாமென்றார்கள்.

## காட்சி: 1

மேடையை மூடியிருந்த திரைச்சீலையானது விலகுகிறது. ஒரு மெல்லிய வெளிச்சம் மேடையைச் சூழ்ந்திருக்க... அக்லேயா, சூடு பறக்கும் தேநீர் கோப்பையை ஏந்தியபடிக்கு சாளரத்தின் திரைச்சீலையை விலக்குகிறாள். பின், நித்திரையிலிருக்கும் சோஃபியாவை தயங்கியவாறு எழுப்புகிறாள்.

"மதிப்புக்குரிய எஜமானி குரோசியா அவர்களே, வழக்கமாக நீங்கள் எழும் நேரம் ஆகிவிட்டது. ஆகவே, நான் உங்களுக்காக தேநீர் கோப்பையோடு வந்திருக்கிறேன். எழும்புங்கள், எழுந்து இந்த தேநீரை அருந்துங்கள்" என்றாள்.

தன் இரண்டு கைகளையும் உயர்த்தி சோம்பல் முறித்தவளான சோஃபியா, பிற்பாடு போர்வையை விலத்தி அமர்ந்துகொண்டாள். அவள் அப்படிச் செய்யும்போது அனிச்சையாக அவளுடைய வலதுகை, அவளின் மார்புப் பகுதி ஆடையை சரிசெய்து கொண்டது.

"நேரம் சரியாக ஒன்பதரையா?" சோஃபியா, அக்லேயாவிடம் இவ்வாறு வினவியபோது அக்லேயா மிதமிஞ்சிய பணிவுடன் தன்னுடைய உடலை பணித்து, "ஆமாம் எஜமானி குரோசியா அவர்களே" என்று பதிலுரைத்துவிட்டு பின் நிமிர்ந்துகொண்டாள். தேநீரை வாங்கி ஒரு மிடறு குடித்தவளான சோஃபியா பின் அக்லேயாவை போகச் சொன்னாள். தேநீரை முழுவதுமாக குடித்து முடித்தாள். காலி கோப்பையை அருகிலிருந்த மேஜையில் வைத்துவிட்டு பாதணிகளை அணிந்துகொண்ட அவள் குளியலறைக்குள் சென்று ஐந்து நிமிடங்கள் கழித்து மறுபடியும் வெளியே வந்தாள். அப்போது மெல்லிய வயலின் இசை ஒலிக்கத் தொடங்கிற்று.

## காட்சி: 2

விலையுயர்ந்த ஆடைகளையும் நகைகளையும் அணிந்திருந்தவளான சோஃபியா உணவு மேஜையில் அமர்ந்திருந்தாள். பின்னணியில் வயலின் இசை தொடர்ந்து ஒலித்துக் கொண்டேயிருந்தது. அக்லேயாவும் ஸென்னியும் பணிவுடனும் நேர்த்தியுடனும் தங்கள் எஜமானிக்கு உணவு பரிமாறினார்கள். அப்படி அவர்கள் பரிமாறும்போது தங்கள் எஜமானியை விட்டு ஓரடி விலகியே நின்றுகொண்டார்கள். அப்போது சோஃபியா பேசத் தொடங்கினாள்.

"நான் என்னுடைய கணவரின் விஷயமாக இன்று வெளியூர் செல்கிறேன்; கனவான் இவ்நோஸ்கியைச் சந்திக்க வேண்டும்; இரவுபோல்தான் திரும்புவேன்."

"நல்லது எஜமானியே நீங்கள் அவ்வாறே செய்யுங்கள் ஒரு சிறிய கேள்வி நீங்கள் இங்கு இல்லாத சமயத்தில் நாங்கள் என்ன செய்யவேண்டுமென்பதை சொன்னீர்களென்றால் எந்த குழப்பமுமில்லாமல் நாங்கள் அதைச் செய்து வைப்போம்" என்றாள் ஸென்னி. அப்போது ஸென்னியை உற்றுப் பார்த்த சோஃபியா, "நான் என்ன செய்ய வேண்டுமென்பதை நீ எனக்குச் சொல்லாதே. நான் இங்கு இல்லாத சமயத்தில் நீங்கள் இருவரும் என்ன செய்யவேண்டுமென்பதை நான் முன்னரே யோசித்து வைத்திருக்கிறேன்" என்றாள்.

சோஃபியா, தன்னை அவமானப்படுத்தும் விதமாக அவ்வாறு கூறியதைக் கேட்ட ஸென்னி அக்லேயாவை பார்த்தபோது, அக்லேயா அவ்வளவு நேரமும் தன்னையே பார்த்துக் கொண்டிருந்ததையும் தான் பார்த்தபோது தலையைத் தாழ்த்திக் கொண்டதையும் கவனித்தாள். ஏதோ சொல்ல நினைத்தவள் தன் எஜமானியின் குணம் தெரிந்து அமைதியானாள்.

எட்டு விநாடிகள் கழித்து அக்லேயாவைப் பார்த்து சோஃபியா, "இன்று எப்படியாவது அந்தக் கடிதத்தை எழுதி முடித்துவிடு" என்றாள்.

பின்னர் ஸென்னியிடம், "என்னைச் சந்திப்பதற்காக மாலைபோல் ஒருவர் வருவார். அவர் அரசாங்கத்தில் பணிபுரியும் திரு. ரஸுமிகின். அவர் வரும்போது அவருடைய குளிரங்கியை கழற்றுவதற்கு அவருக்கு உதவி செய். அவரை அன்பாகவும் மரியாதையாகவும் உபசரி. ஏனெனில், திரு. ரஸுமிகின் அவர்கள் என் கணவருக்கு மிகவும் வேண்டியவர் அவரில்லையெனில் சிறையிலிருக்கும் என் கணவரை மீட்பது கடினம்" என்றாள்.

தான் அப்படிக் கூறியும் பதிலேதும் சொல்லாமல் கைகளைப் பிசைந்துக்கொண்டிருந்த ஸென்னியை உற்றுப் பார்த்த சோஃபியா, "நான் சொன்னது உன் காதுகளில் ஏறவில்லையா?" என்று கத்தினாள். அப்போது பின்னணியில் ஒலித்துக்கொண்டிருந்த வயலின் இசையானது இரண்டு தடவைகள் விட்டுவிட்டு ஒலித்தன. நடுங்கிப் போனவளான ஸென்னி, "என்னை மன்னித்துவிடுங்கள்... எஜமானி குரோசியா அவர்களே நீங்கள் கூறிய அனைத்தையும் நான் செவிமடுத்தேன் உங்கள் விருப்பப்படியும் திரு. ரஸுமிகின் அவர்களின் விருப்பப்படியும் நான் நடந்து கொள்வேன்" என்றாள்.

## காட்சி: 3

அக்லேயாவும் ஸென்னியும் சமையலறையில் இருந்தார்கள். அவர்கள் தங்களின் எஜமானி குரோசியாவுக்காக மதிய உணவினை தயார் செய்துகொண்டிருந்தார்கள். அப்போது ஸென்னியிடம் அக்லேயா கிசுகிசுப்பான குரலில், "உனக்கு குரோசியாவைப் பற்றித் தெரியும்தானே. பிறகேன்



அப்படி நடந்து கொண்டாய்?" என்றாள். ஸென்னியின் தேகமானது கோபத்தினாலும் அவமானத்தினாலும் நடுங்கிக்கொண்டிருந்தது. கைகளில் படபடப்பை உணர்ந்த அவள் விம்மி விம்மி அழ ஆரம்பித்தாள். அவளால் பேச முடியவில்லை. தொண்டை அடைத்து குரல் அடைக்குமாற் போல் தோன்றவே அவள் பெரும் குரலெடுத்து அழத் தொடங்கினாள். அக்லேயா, ஸென்னியின் தோள்களைத் தடவிக்கொடுத்து, "அழாதே, அழாதே" என்றாள்.

ஸென்னியால் அழுகையை கட்டுப்படுத்த முடியவில்லை. குழாயைத் திறந்த அவள் வெதுவெதுப்பான தண்ணீரை முகத்தில் அறைந்து அடித்தாள். பிற்பாடு, முகத்தைவழித்துத்துடைத்த அவள், மற்றக் கையினால் குழாயினைத் திருகிக்கொண்டே அக்லேயாவைப் பார்த்து சிவந்திருந்த கண்களால் கீழ்கண்டவாறு சொன்னாள்.

"கொன்றுவிடலாமா?"

திரை மூடியவுடன் சோஃபியா மறுபடியும் ஒப்பனை அறைக்கே சென்றாள். அவளைத் தொடர்ந்து ஸென்னியும் உள்ளே நுழைந்தாள். மறுபடியும் நாடகம் தொடங்குவதற்கு இன்னும் பத்து நிமிடங்கள் இருக்கின்றன. ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள். முதலில் ஸென்னிதான் ஆரம்பித்தாள். "அப்போதே கேட்கவேண்டுமென்று நினைத்தேன். இப்போதெல்லாம் எதற்காகத் தாமதமாக வருகிறாய்? பவுல்விச் மிகவும் கோபமாக இருந்தான், உன்னை அவன் காணவில்லையா?"

சாயத்தை உதடுகளில் அழுத்தித் தேய்த்தவள், பிற்பாடு, உதடுகள் இரண்டையும் ஒன்றோடொன்று நீவினாள். முகத்தை கண்ணாடிக்கு அருகாகக் கொண்டு சென்றவள், "பார்த்தான்... ஆனால், ஏதோ வேலையாக இருந்திருக்கிறான் போலிருக்கிறது... நான் சொன்னதைக் காது கொடுத்துக் கேட்டானில்லை" என்றாள்.

"பார்த்து... சூதனாமாக இருந்துகொள். பவுல்விச் எப்போதும் ஒரே மாதிரி இருப்பவனில்லை."

ஸென்னி, பவுடரை எடுத்து முகத்தில் அப்பினாள். இரண்டு கன்னங்களையும் திருப்பித் திருப்பிப் பார்த்தாள். இடது கன்னத்திலிருந்த ஒப்பனை கொஞ்சம் குறைச்சலாகத் தெரியவே மறுபடியும் பவுடரை அப்பிக்கொண்டாள். "அதுசரி... இன்று எதற்காகத் தாமதமாக வந்தாய்?" ஸென்னி கேட்டாள்.

"உனக்குத் தெரியாததா... வழக்கம்போல்தான். என் கணவனோடு இருப்பதற்குப் பதில் செத்துவிடலாமென்று தோன்றுகிறது." அவள் மேலும் சொன்னாள். "தயவு செய்து இதற்கு மேல் எதுவும் கேட்காதே; அழுகை வந்துவிடும்; அழுதால் ஒப்பனை கலைந்து எல்லாம் நாசமாகிவிடும்." அப்படிச் சொல்லும்போதுகூட தன்னுடைய கண்கள் கலங்கத் தொடங்குவதை சோஃபியா உணர்ந்தாள். தன்னையும் மீறி அழுகை வந்துவிடுமோ எனப் பயந்தாள். கொஞ்ச நேரம் தனியே இருந்தால் தேவலாமென்று தோன்றிற்று. திடீரென்று, சிகரெட் பெட்டியிலிருந்து சிகரெட் ஒன்றை உருவி எடுத்தவள் அதைப் பற்ற வைத்து புகையை ஆழமாக உள்ளிழுத்தாள். சோஃபியா எப்போதுமே இப்படித்தான். மனம் நிரம்பிய துன்பத்தோடிருக்கும்போது சிகரெட் ஒன்றை பற்ற வைத்து அதன் புகையை ஆழமாக உள்ளிழுப்பாள்.

அது அவளுக்கு ஆசுவாசம் தருவதாய் தோன்றும். ஒரேயொரு உள்ளிழுப்பில் புகையின் ஆழத்தில் தன் அத்தனை ஆக்கினைகளும் பொசுங்கிப் போவதாக அவளுக்குப் படும்.

## காட்சி: 4

*ரஸுமிகினுக்கு நீள் முகம். தலைமுடியை வாரி படிய இழுத்திருந்தார். சுத்தமாக மழிக்கப்பட்டிருந்த நாடியில் பச்சை தெரிந்தது. ஸென்னி அவருடைய குளிரங்கியைக் கழற்றுவதற்கு உதவி செய்தாள். ரஸுமிகின் அவையெல்லாவற்றுக்கும் நன்றி நன்றியென்று சொல்லிக்கொள்பவராகயிருந்தார். அப்படிச் சொல்லிக்கொள்ளும்போது அவர் கொடுப்பின் தங்கப்பல்லானது தெரியலாயிற்று. அக்லேயா அவருக்கு ஏலக்காய் சுவையுடைய தேனீரையும் அவிக்கப்பட்ட சோளப்பொத்திகள் இரண்டையும் பரிமாறினாள்.*

*திரைச்சீலைக்கு பின்னாலிருந்து, இவை யாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்த சோஃபியாவுக்கு சிரிப்பு வந்தது. அப்போதெல்லாம் அவள் தன்னுடைய நிஜமான வாழ்க்கையை நினைத்துக்கொள்வாள். மேடையில் தானொரு எஜமானி; தனக்குப் பணிவிடை செய்ய இரண்டு வேலைக்காரப் பெண்கள்; பகட்டான ஆடம்பரமான வாழ்க்கை. ஆனால், நிஜத்தில், குடிகாரக் கணவன்; பசிக்கிறபோது அவித்த உருளைக்கிழங்கையும் கெட்டுப்போன சூப்பையும் உண்ணுவதற்கு பழக்கப்பட்ட ஆனால், பாவப்பட்ட பிள்ளைகள். அப்போது, சோஃபியாவின் கண்களிலிருந்து உதிர்ந்த கண்ணீர்த்துளி ஒன்று நிலத்தில் வீழ்ந்து தெறித்தது.*

நாடகம் முடிந்து சோஃபியா வெளியேறியபோது சாமமாயிருந்தது. பனி முகத்திலடித்தது. காதுகளில் 'உய்'யென்கிற சத்தம். நிதானித்துத் தெருவைப் பார்த்தவளான சோஃபியா, சிரமம்தான் எனச் சொல்லிக்கொண்டாள். சதக், புதக்கென்று சப்பாத்துக் கால்கள் பனியினுள் புதைய அவள் நடக்க ஆரம்பித்தாள். இருபது சப்தடிகள் தூரம் நடந்தவள் - அப்படி நடக்கும்போது அவளுடைய கிழிந்த சப்பாத்தினூடாகக் குளிர்ந்த நீர் உட்புகுந்து அவளின் காலுறைகளை நனைத்தது - அடிக்கடி மூக்கை இழுத்துக்கொண்டாள். "சவம்...இந்தஇரவுநேரத்திலுமா இப்படிக் கொட்டித் தொலைக்க வேண்டும்" என்று முணுமுணுத்தவளான சோஃபியா கையுறைகளை மறந்து வீட்டிலேயே விட்டு வந்ததை நினைத்து வருந்தினாள். கைகள் இரண்டையும் ஒன்றோடொன்று தேய்த்து சூடேற்றிக் கொண்டாள்.

சோஃபியாவுக்கு மறுபடியும் கணவன் பற்றிய நினைவு வந்தது. அப்படியான நேரங்களில் அவள் தன்னையும் அறியாமல், 'சூக்கா பில்லியர்ட்ஸ்' என்கிற வசைச் சொல்லொன்றினைச் சொல்லிக்கொள்வாள். ஆனால், பிற்பாடு அப்படிக் கூறிக்கொண்டதற்காக கணவனிடமும் கிருஸ்துவிடமும் மானசீகமாக மன்னிப்புக் கேட்பாள். ஏனெனில், தன் கணவன் மாபெரும் குடிகாரனே ஒழிய, கெட்டவன் இல்லையென்பதை அவள் அறிந்தேயிருந்தாள். இருந்தாலும் அவள் தன் கணவனை ஏதோ ஒரு விதத்தில் வெறுக்கவே செய்தாள். அதற்கான நியாயமான காரணங்களும் அவளுக்குள் இருக்கவே செய்தன. அதில் முதல் காரணம் இப்படிப் பொறுப்பில்லாமல் குடித்துக்கொண்டு திரிகிறான் என்பதே.

சரிதான்...! திருமணத்தையும் முடித்துவிட்டு போதாததற்கு பிள்ளைகளையும் பெற்றுவிட்டு அவர்களைப் பற்றிய எந்த அக்கறையுமில்லாமல் இரவு பகலெனக் குடித்துக்கொண்டு திரிந்தால் எந்தப் பெண்தான் அதை விரும்புவாள். சோஃபியா இப்போது நன்றாக அழுதாள். யாருக்குத் தெரியப் போகிறது என்கிற தைரியத்தில் - அப்படித் தெரிந்தால்தான் என்ன வந்துவிடப் போகிறது? - அழுதாள். இந்த விஷயத்தில், சோஃபியாவை அதிகமும் வருத்தியது, இரண்டு மாதங்களுக்கு முதல், இனிமேல் குடிக்கவே மாட்டேன் எனச் சத்தியம் செய்துவிட்டு 'அப்படி' நடந்து ஐந்து நாட்களின் பின்னர் குடித்துவிட்டு வந்ததுதான்.

சோஃபியாவுக்கு தன் கணவனின் உளச்சிக்கல் பற்றி இன்னமும் சரியாகப் புரிந்துகொள்ள முடியவில்லையே என்கிற கவலையிருந்தது. ஆனால், அதே நேரம் நிரம்பக் குடித்துவிட்டு தன்னையும் அறியாமல் வரும்போதுகூட, திருமணமாகி இத்தனை ஆண்டுகளாகியும் தனக்கோ பிள்ளைகளுக்கோ அடித்ததில்லை என்பதை நினைக்கும்போது அவளுக்கு வியப்பாகவுமிருந்தது.

சோஃபியா வீட்டின் கதவை அறைந்து மூடினாள். அத்தனை நேரமுமாய் குளிரிலிருந்தவளுக்கு வீட்டின் வெதுவெதுப்பு சற்று ஆசுவாசமாயிருந்தது. அவள் தன்னைத்தானே சிலுப்பிக்கொண்டாள். அவள் அவ்வாறு செய்யும்போது அவளின் குளிரங்கியில் படித்திருந்த பனித் தூவல்கள் உதிர்ந்து விழுந்தன. குளிரங்கியைக் கழற்றி கொழுக்கியில் மாட்டியவள், சப்பாத்துகளைத் தேய்த்துப் பின் கழற்றிக்கொண்டாள். பிற்பாடு, ஈரமாயிருந்த காலுறைகளை பாதங்களிலிருந்து உருவி அதைச் சப்பாத்துக்குள் புதைத்துக்கொண்டாள்.

விரல்களை மடக்குவதற்கு பிரயத்தனப்பட்ட சோஃபியா, ஒரு கோப்பை சூடு நிரம்பிய கோப்பி இருந்தால் நன்றாக இருக்குமேயென நினைத்துக்கொண்டாள்.

*இயலுமானவரை குதிகாலினை மேலெழுப்பி சுற்றிச் சுற்றி ஆடினாள் அன்னா. அப்படி அவள் தன்னையே சுற்றிக்கொள்ளும்போது அவள் அணிந்திருந்த பாவாடை, ஒரு அழகான குடைபோல் விரிந்து, சுற்றி பின் அமர்ந்தது. அன்னா எப்போதுமே இப்படித்தான், நேரம் கிடைக்கும்போது நடனம் ஆடுவாள். பக்கத்தில், அவளின் தங்கை சோனியா நிலத்தில் அமர்ந்திருந்து தாளம் போடுவாள். சிலநேரங்களில் தங்கை சோனியா இசைக்கும் தாளத்துக்கு ஏற்றவாறு தன்னுடைய நடனத்தை அமைத்துக்கொள்ளவேண்டும். சிலநேரங்களில், சோனியா, அக்கா அன்னாவின் நாட்டியத்துக்கு ஏற்றவாறு தன்னுடைய தாளத்தினை அமைத்துக்கொள்ள வேண்டும்.*

*சோஃபியா இவை யாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்தபோது மிகுந்த போதையில் மார்ஃபா பெத்ரோவிச் அந்த அறைக்குள்*



உள்ளிட்டான். அவன் அணிந்திருந்த குளிரங்கியில் பனித் தூவல்கள் படர்ந்திருந்தன. குளிரில் அவனுடைய இரண்டு கன்னங்களும் இரத்தம் கன்றிக் கண்டிருந்தது. நேராகப் பிள்ளைகளிடம் சென்றவன், அவர்களிருவரையும் அரவணைத்து நெற்றியின் உச்சியில் முத்தமிட்டான். பின் அவர்களோடு கூட அமர்ந்துகொண்டவனான மார்ஃபா பெத்ரோவிச்சின் உதடுகள் புன்னகைத்தவாறேயிருந்தன. சோஃபியா இவையாவற்றையும் கண்டுகொண்டாளில்லை. அவள் கைகள் உருளைக்கிழங்கின் தோல்களைச் சீவுவதிலேயே குறியாக இருந்தன.

சோனியாவின் மடியில் தலை வைத்துப் படுத்திருந்தவனான பெத்ரோவிச் சிறிது நேரம் கழித்து எழுந்து கொண்டான். நேராக சோஃபியாவிடம் சென்றவன், அவள் முகத்தைப் பார்ப்பதற்கு அஞ்சி அவள் கையினைப் பற்றிக்கொண்டு அதன் மய்யத்தில் முத்தமிட்டான். அப்போது, பெத்ரோவிச் கண்களிலிருந்து இளஞ் சூட்டுடனான கண்ணீர்த் துளியானது வெளியேறி சோஃபியாவின் விரல்களை நனைத்தது.

சோஃபியா அப்போதும் ஒரு சொல் பேசினாளில்லை.

அது, கிருஸ்மத்து மாதமென்பதால் நகரத்தில் அப்போதும்பனி தூவிக்கொண்டிருந்தது. கூடவே நல்ல வெய்யிலும் சந்தையில் கூட்டமுமிருந்தது. 'திசைஸ்' குளத்துக்கு அப்பால், வெரோனிக்காவின் பத்திரிக்கைக் கடையைத் தாண்டி நிறையப் புறாக்களிருந்தன. யாரோ ஒருவர் அந்தப் புறாக் கூட்டத்துக்கு சோளப் பொறிகளை விசிக்கிக் கொண்டிருந்தார். அதற்கும் அப்பால், கனமான குளிரங்கி அணிந்திருந்த சிறுவர்கள், பனிக்கட்டிகளை ஒருவர் மேல் ஒருவர் விசிறி விளையாடிக் கொண்டிருந்தார்கள். அதில், பச்சை நிறத்தில் குளிரங்கி அணிந்துகொண்டு தொக்கையான முகத்துடனிருந்த குழந்தை ஒன்று சோஃபியாவைப் பார்த்துச் சிரித்தபோது சோஃபியாவும் சிரித்துக்கொண்டாள்.

அன்னாவையும் சோனியாவையும் சந்தைக்குள் அழைத்துச் சென்ற மார்ஃபா பெத்ரோவிச், அவர்களிருவருக்கும் கருப்பு நிறத்திலானதும் 'பிங்' நிறத்திலானதுமான சப்பாத்துக்கள் இரண்டை வாங்கிக் கொடுத்தான். கூடவே, அவர்களுக்குத் தோதாகயிருக்கும் ஒரே நிறத்திலானதும் ஒரே சாயலிலுமான குளிரங்கிகள் இரண்டையும் வாங்கிக் கொடுத்தான். அந்த இடத்தில் வைத்தே பழையதைக் கழற்றிவிட்டு புதியதை அணிவித்தான். பிள்ளைகளைப் பார்த்துச் சிரித்து பின் அவர்கள் இருவரினதும் உச்சந்தலையில் ஆசையாக முத்தமிட்டுக்கொண்டான். சோஃபியாவைப் பார்த்து உனக்கு ஏதும் வேண்டுமாயெனக் கேட்டபோது சோஃபியாவானவள்,

அப்போதும் ஒரு சொல் பேசினாளில்லை.

இப்போது, அவர்கள் நால்வரும் தெருவின் ஓரத்தில் நடந்து கொண்டிருந்தார்கள். பிள்ளைகள் இருவரும் பல வண்ணங்களிலான பலூன்களை ஏந்தியபடிக்கு இருந்தார்கள். அப்போது, மார்ஃபா பெத்ரோவிச் தெருவில் இறங்கி திடுமென்று நின்று எதையோ சிந்தித்தான். அவ்வேளையில், குதிரை வண்டிக்காரனொருவன், மார்ஃபா பெத்ரோவிச்சைப் பார்த்து, "ஏய்... குடிகார நாயே, கண் மண் தெரியாமல் குடித்துவிட்டு இப்படித்தான் நடுத்தெருவில் நின்று நித்திரை கொள்வாயா?" என்று திட்டினான். சுதாகரித்து சுற்றும் முற்றும் பார்த்த மார்ஃபா பெத்ரோவிச், ஒரே தாவலில் தெருவின் ஓரத்துக்குப் பாய்ந்தான். குதிரை வண்டிக்காரனைப் பார்த்து, தன் நெஞ்சில் கை வைத்துக்கொண்டவனான அவன், என்னை மன்னித்து விடுங்களென்று முணுமுணுத்தான்.

இவை யாவற்றையும் மௌனமாகப் பார்த்துக்கொண்டிருந்த சோஃபியாவுக்கு அழுகை வந்தது. ஆனால், அவள், அப்போதும் ஒரு சொல் பேசினாளில்லை.

சுருட்டப்பட்டிருந்த சூடான ரொட்டித் துண்டை தன்னுடைய வாய்க்குள் அதக்கிக்கொண்டபோது சோஃபியா, பெத்ரோவிச்சை பார்த்துக்கொண்டாள். அப்புராணியாக, வஞ்சனையற்ற முகத்தோடு பெத்ரோவிச்சும் தன்னுடைய ரொட்டித் துண்டை வாய்க்குள் அதக்கிக் கொண்டபோது சோஃபியாக்கு அவனை நினைத்து பரிதாபமாகயிருந்தது. அந்தக் க்ஷணத்தில், சோஃபியாவை தாங்க முடியாத துயரம் பற்றிக்கொள்ளும். பெத்ரோவிச் மீதிருக்கும் அத்தனை கோபங்களையும் வெறுப்புகளையும் உதறி எறிந்துவிட்டு

அப்படியே அவரை கட்டிக்கொள்ளலாமா என்று தோன்றும். யாருமற்ற வசந்தகால நேரமொன்றில் - சோளக் காட்டின் மத்தியில் - அவரை தன் மடியில் படுக்கவைத்து ஆறுதலாக அவரின் தலைமுடியினை விரல்களால் கோதிவிட வேண்டுமென்றும் அவளுக்குத் தோன்றும். ஆனால், அதெல்லாம் ஒரு க்ஷண நேரத்தில் முடிந்து விடக்கூடிய ஒரு விஷயமாகவே அவளுள் இருந்தன. ஏனெனில், தன் கணவனைக் குறித்து அவளுள் வெறுப்புமிருந்தது.

மார்ஃபா பெத்ரோவிச் இரவில் சோஃபியாவை புணர ஆரம்பித்தபோதும் சோஃபியா ஒரு சொல் பேசினாளில்லை. கணவனின் உலர்ந்திருந்த உதடுகள் தன் ஈரலிப்பு நிறைந்த உதடுகளை ஸ்பரிசித்த போது மறுப்பேதும் சொல்லாமல் கண்களை மூடிக் கிடந்தாள். போதையிலிருந்தவனான பெத்ரோவிச் வேகமாக இயங்க ஆரம்பித்தான். அப்போது அவனுடைய முகத்திலிருந்து வியர்வைத் துளியொன்று வழிந்து சோஃபியாவின் நெற்றியில் வீழ்ந்து தெறித்தது. 'எல்லாம்' முடிந்த பின், சோஃபியா அவனிடம், "நாம் பிரிந்து விடக் கூடாதா?" என்றாள்.

நெற்றிக்குகையைக் கொடுத்துப் படுத்திருந்தவனான மார்ஃபா பெத்ரோவிச், திடுக்கிட்டு... சோஃபியாவை பார்க்க எத்தனித்து... பின் பார்க்காமலேயே மறுபடியும் கையை நெற்றிக்குக் கொடுத்தான். சிறிது நேரம் கழித்து பெருமூச்சொன்றை சொரிந்தவன், "ஏன்... நான்தான் திருந்தி விட்டேனே" என்றான். கிடையாகக் கிடந்து தன் கணவனின் பக்கவாட்டு முகத்தையே பார்த்துக்கொண்டிருந்த சோஃபியா, நேராக மல்லாந்து படுத்தாள். பின் இப்படிச் சொன்னாள்.

"இப்படி எத்தனை தடவைகள் சொல்லிவிட்டீர்கள்... ஆனால், மறுபடியும் மறுபடியும் குடித்துக்கொண்டுதான் இருக்கிறீர்கள். ஒரு பெண்ணுக்குத் தன் கணவன் அசடனாக இருப்பதில் கவலையில்லை. உங்களிடம் ஒன்று சொல்கிறேன்; நாமிருவரும் திருமணம் முடித்த ஆரம்பத்தில்... உங்களின் நல்ல உள்ளத்தை குறிப்பாக உங்களுக்குள்ளிருந்த அசட்டுத்தனத்தை நான் விரும்பினேன். உங்களை போன்ற ஒரு நல்ல இதயம் கொண்ட ஒருவரை என்னுடைய கணவராகக் கொடுத்ததற்கு மாதாவுக்கு நன்றிகூடக் கூறினேன். ஆனால், காலப்போக்கில், அதுவும் பிள்ளைகளென்று வந்த பிறகு உங்களின் அசட்டுத்தனத்தை என்னால் ஏற்றுக்கொள்ளவே முடியவில்லை"

பதிலேதும் பேசாமல் அப்படியே கிடந்த மார்ஃபா பெத்ரோவிச் தேகத்தைச் சரித்து கிடையாகப் படுத்தான். பக்கவாட்டாகத் தெரியும் தன் மனைவியின் முகத்தைப் பார்த்து, "எவ்வளவு முயன்றும் என்னால் என் குணத்தை மாற்ற முடியாமலிருக்கிறது... நானென்ன செய்வது?" என்றான்.

"தெரியும்... உங்களால் உங்கள் குணத்தை மாற்ற முடியாதென்று எனக்குத் தெரியும்" என்றவள், தன் தேகத்தைச் சரித்து தானும் கிடையாகப் படுத்து சிறிது நேரம் தன் கணவனின் கண்களையே பார்த்துக் கொண்டிருந்தாள். பின் பார்வையை அவன் மார்புக்கு தாழ்த்தி, "அது உங்களுடைய குற்றமல்ல... எதன் குற்றமென்றும் எனக்குத் தெரியவில்லை. உங்களை வளர்த்த விதம் அப்படியிருக்கலாம். ஆனால், இந்த நாற்பத்தி இரண்டு வயதிலும் நீங்கள் இன்னமும் அசடாகவே இருக்கிறீர்கள்" என்றாள்.

"எனக்கு நிச்சயமாகப் புரியவில்லை... நான் இப்படி இருப்பதில் உனக்கென்ன வந்து விடுகிறது. கொஞ்சமோ நஞ்சமோ தருகிறேன் தானே...?"

"நீங்கள் கொடுப்பது போதுமானதாக இருப்பின் நான் எதற்கு வேலைக்குப் போக வேண்டும்" என்றவள், மார்ஃபா பெத்ரோவிச்சின் கண்களையே பார்த்துக்கொண்டு மேலும் சொன்னாள்: "கடந்த வாரம் ஸ்விட்ரிகைலோவுக்கு எதற்காக ஆறு கோபேக்குகள் கொடுத்தீர்கள்?

சோஃபியா இப்படிக் கேட்டதும் தன் தலையைத் சற்று உயர்த்திக் கொண்டவனான மார்ஃபா பெத்ரோவிச், "பாவம்... உனக்கு அவனைப் பற்றித் தெரியும்தானே... திரு. பெலகாயா இவான்விச் இறந்த பிறகு அவன் தனி மரமாகி விட்டான். நண்பனென்று நான் மாத்திரம் தானிருக்கிறேன்" என்றான். பின், தன் தலையை மறுபடியும் தலையணைக்கே கொடுத்து கண்களை மூடிக்கொண்டான்.

"அப்படியெனில் எனக்கும் நம் பிள்ளைகளுக்கும் யாரிருக்கிறார்கள்?"

மார்ஃபா பெத்ரோவிச் இப்போது மல்லாந்து படுத்துக்கொண்டான். கண்களைத் திறந்து ஒரு குறிப்பிட்ட விட்டத்தையே பார்த்துக்கொண்டிருந்தான். தன் கணவனின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்த சோஃபியா பரிதாபம் நிரம்பிய 'அந்த' முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தால் தனக்கு மறுபடியும் அவன் மீது இரக்கம் வந்து விடுமோ என்கிற பயத்தில் ஒரு வேகத்தோடு தன் உடலைத் திருப்பிக் கொண்டாள். துக்கம் எதையோ அடைப்பது போல தோன்றியது. சிறிது நேரத்துக்கு அவர்களிருவரும் எதுவும் பேசிக்கொண்டார்களில்லை. பெரும் நிசப்தமா யிருந்தது. இறுதியில், சோஃபியாவே ஆரம்பித்தாள்.

"நீங்கள் அவன் மீது இரக்கம் கொள்கிறீர்கள்; பணம் கொடுக்கிறீர்கள்; ஆனால், அவனோ... கொஞ்சம்கூட நன்றியில்லாமல் அன்று உங்களை அத்தனை பேர் முன்னிலையிலும் தூஷண வார்த்தைகளால் நிந்தித்தான். கட்டிய மனைவியாகிய எனக்கு எவ்வளவு அவமானமாக இருந்ததென்று உங்களுக்குத் தெரியுமா? கூனிக் குறுகிப் போனேன். ஆனால், நீங்களோ அப்போதும்கூடச் சிரித்துக்கொண்டுதான் இருந்தீர்கள்."

"ஆனால், முழுப் பிழையும் என் மீதுதானே...?"

"பிழை உங்கள் மீதுதான்... ஆனால், அதை நீங்கள் வேணுமென்றா செய்தீர்கள். உங்களின் அசட்டுத்தனம். உங்களின் புத்தியில்லாத்தனம்" என்றவள் இடையில் நிறுத்தினாள். சிறிது நேரம் கழித்து மேலும் சொன்னாள்: "முதலில் 'இப்படி' யோசிப்பதை நிறுத்துங்கள், கொஞ்சமாவது அக்கிரமம் செய்யப் பழகுங்கள்"

"சரி விடு... இப்போது இந்த விஷயத்தில் நீ என்ன முடிவெடுத்திருக்கிறாய்?"

"நாம் பிரிந்து விடுவோம் மார்ஃபா பெத்ரோவிச்."

இப்போது சோஃபியா, மார்ஃபா பெத்ரோவிச்சுக்கு



மார்ஃபா பெத்ரோவிச் இரண்டு வாரங்களாக வீட்டுக்கு வரவில்லை. அதாவது, நாமிருவரும் பிரிந்து விடுவோமென சோஃபியா கூறிய அத்தினத்திலிருந்து இரண்டு நாட்களுக்குப் பிறகு அவன் வரவேயில்லை. நகரத்தில்கூட அவன் குறித்து எந்த அசுமாந்தமும் கிடையாது. அவனின் குதிரை வண்டிகூட அப்படியே இருந்தது. ஆரம்பத்தில், பிழைப்புக்கு அவன் குதிரை வண்டியையாகினும் எடுத்துச் சென்றிருக்கலாமென நினைத்த சோஃபியா, பின்னர் அது குறித்துச் சிந்தித்தாளில்லை. இப்போதெல்லாம் ஒரு நேர ஒழுங்கோடு அவள் நாடகத்துக்குப் போய் வந்து கொண்டிருந்தாள். நடிப்பிலும் சிரத்தை எடுத்து நடித்தாள். அவளுடைய முகமும் அகமும் மகிழ்ச்சியால் நிரம்பித் தளும்பிற்று. உன்னுடைய நடிப்பைப் பார்ப்பதற்காகவே நாங்கள் இங்கே வருகிறோமென பார்வையாளர்கள் கூறியதாக பவுல்விச் அவளிடம் கூறியபோது துள்ளிக் குதித்து ஆடினாள். அடிக்கடி ஸென்னியையும் அக்லேயாவையும்... சமயங்களில், பவுல்விச்சையும் தன் வீட்டுக்கு அழைத்து வான் கோழி விருந்து கொடுத்தாள். மார்ஃபா பெத்ரோவிச்சின் குதிரை வண்டியை நல்ல விலைக்கு விற்றவள் அந்தப் பணத்தைக்கொண்டு ஸென்னியின் கடனையும் பவுல்விச்சின் கடனையும் கொடுத்தாள். மிகுதியை வட்டிக்குக் கொடுப்போமாயென யோசித்தவள்... பின், அதை தானியமிருந்த மண் பானையொன்றுக்குள் புதைத்து வைத்தாள். ஆரம்பத்தில், தகப்பனைக் குறித்து விசாரம் கொண்ட பிள்ளைகள் இப்போது அவரைக் குறித்து எதுவுமே தன்னிடம் கேட்பதில்லை என்பதை நினைத்து ஆசுவாசம் கொண்டாள்.

அன்று, பிள்ளைகளுக்கு அவர்களின் வயிறார உணவு கொடுத்தவள் அவர்கள் சாப்பிட்டு முடித்ததும் அவர்களை நித்திரைக்கு அனுப்பினாள். பின், தானும் சாப்பிட்டாள். பாத்திரங்களை கழுவித் துடைத்து அடுக்கினாள். நித்திரைக்குப்போகும் முன், சட்டகமிட்ட மாதாவின் படத்துக்கு முன்னால் முழந்தாழிட்டு ஜெபித்தாள். தனக்கும் தன் பிள்ளைகளுக்கும் நிம்மதியான வாழ்வைக் கொடுத்தமைக்காக மாதாவுக்கு நன்றி கூறினாள்.

எல்லாவற்றையும் முடித்துவிட்டு தன் அறைக்குச் சென்றவள் கட்டிலில் ஏறிப்படுத்தாள். மொத்தமாயிருந்த போர்வையை கழுத்து வரை இழுத்துவிட்டுக் கொண்டாள். சட்டென்று போர்வையை தன் மூக்குக்குக் கொடுத்து அதன் வாசனையை நுகர்ந்தாள். “என்னுடைய மேரி மாதாவே” என்று முணுமுணுத்தவளான அவள், விளக்கை அணைத்து கண்களை மூடிக் கொண்டாள்.

சிறிது நேரம் கழித்து, சோஃபியா அப்போதும் அழுதாள். ●

தன் முதுகினைக் காட்டியவாறு படுத்திருந்தாள். தன்னுடைய முடிவில்தான் தீர்மானமாக இருப்பதாய் உணர்த்துவதற்கு அவளுக்கு அதைத் தவிர வேறு வழி தெரியவில்லை. அழுகை வருமாற் போல் படவே சற்று விம்மியவள் பிறகு அதை நிறுத்தி சட்டென்று திரும்பினாள். “எனக்கு நிச்சயமாய் தெரியும்... நாம் பிரிந்து விடுவதுதான் நல்லது.”

பெரும் குழப்பத்திலிருந்தவனான மார்ஃபா பெத்ரோவிச் எழுந்துகொண்டான். அவன் எதுவும் பேசினானில்லை. நேராகக் கழிவறைக்குச் சென்றவன், சிறிது நேரம் கழித்துத் திரும்பி வந்தான். அவன் முகத்தில் லேசாகத் தண்ணீர் படர்ந்திருப்பதையும் கண்களில் இரத்தம் கண்டிருந்ததையும் சோஃபியா கவனித்தாள். கட்டிலில் சரிந்தவன், போர்வையால் தன் தேகம் முழுவதையும் போர்த்திக்கொண்டான். அப்போது சோஃபியா மேலும் சொன்னாள்.

“என்னை மன்னித்துவிடுங்கள்... உங்களை நினைத்து பரிதாபம்கொள்கிறேன். ஆனால், எனக்கு இதைத் தவிர வேறு வழி தெரியவில்லை. நான் உங்களை சபிக்கவில்லை. வெறுக்கவுமில்லை. மாறாக, உங்கள் வாழ்வு சிறப்பாகவும் திருப்தியாகவும் அமைய வேண்டுமென்றே ஆவல் கொள்கிறேன். கடவுளிடத்திலும் மன்றாடுகிறேன். ஆனால், எனக்கு விடுதலை தாருங்கள். உங்களுடனான இந்த வாழ்விலிருந்து எனக்கு நிரந்தர விடுதலை கொடுங்கள்.”

தன் தேகம் முழுவதையும் போர்வைக்குள் மறைத்திருந்த மார்ஃபா பெத்ரோவிச், சோஃபியாவின் சொற்களனைத்தையும் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தானே ஒழிய மாறாக ஒரு சொல்லாகினும் பேசினானில்லை.

“நீங்கள் அழுகிறீர்களென எனக்குத் தெரியும்; ஆனால், பிள்ளைகளின் எதிர்காலத்துக்காவது நாம் பிரிந்துவிடுவோம்.”

புகழ்பெற்ற எழுத்தாளர்களின் மறுபக்கம்

# வில்லியம் ஃபாக்னர் என்னும் போஸ்ட்மாஸ்டர்!

ஸிந்துஜா

'போக்கத்தவனுக்குப் போலீஸ் வேலை' என்பதை எங்கள் ஊரில் போஸ்ட்டாபீஸ் வேலை என்று மாற்றிச் சொல்லுவார்கள். சென்ற நூற்றாண்டில் இது அமெரிக்கர்களுக்கும் தெரிய வந்துவிட்டது போலிருக்கிறது.

1921இல் இரண்டாவது தடவையாக மிஸிஸிபி பல்கலைக்கழக வகுப்புகளுக்கு மட்டம் போட்டுத் திரிந்த வில்லியம் ஃபாக்னர் முதலில் ஒரு புத்தகக் கடையில்தான் வேலை பார்த்தார். அவர் அங்கிருக்கும் புத்தகங்களை எடுத்துப் படிப்பதுதான் தன்னுடைய வேலை என்று நினைத்துக்கொண்டு நடந்ததால் வெறுப்புற்ற முதலாளி, ஃபாக்னர் வீட்டில் போய் இந்தக் காரியத்தைச் செய்யலாம் என்று அனுப்பிவிட்டார். ஃபாக்னர் மீது பரிவு கொண்ட அவருடைய நலம் விரும்பி பில் ஸ்டோன் (ஆக்ஸ்போர்டில் வக்கீலாக இருந்தார்) அவருக்கு ஒரு பள்ளிக்கூடத்திலிருந்த தபாலாபீசில் வேலை வாங்கிக் கொடுத்தார்.

ஃபாக்னருக்கு முதல் வருஷத்துக்கு 1700 டாலரும் அதற்குப்பின் 1800 டாலர்களும் வாங்கித் தந்த வேலை அது. இந்த ஆசாமிக்கு எப்படி இவ்வளவு அதிக சம்பளம் என்று பொறாமையும் சந்தேகமுமாகத் திரிந்தார்கள் அவரை அறிந்தவர்கள். காரணம், வேலையில் ஒரு உதவாக்கரையாக ஃபாக்னர் விளங்கினார். அவரை வேலைக்குச் சேர்த்துவிட்ட பில் ஸ்டோனே, "இந்த உலகிலேயே மிக மோசமான போஸ்ட்மாஸ்டர் வில்லியம்தான்" என்று நிராசை அடைந்துவிட்டார்.

எப்போது தனக்கு விருப்பமோ அப்போதுதான் ஃபாக்னர் அலுவலகத்தைத் திறந்து வைப்பார். தபாலில் மற்றவர்களுக்கு வரும் புத்தகங்களைப் பிரித்துப் படித்துவிடுவார். அவர் உதவாதது என்று நினைக்கும் மற்றவர்களது கடிதங்களை மூலையில் தூக்கிப் போட்டுவிடுவார். தபாலாபீசுக்கு வேலையாக வந்தவர்கள் வாசலில் கியூவில் நின்று கொண்டிருக்க, மனிதர் அவரது நண்பர்களுடன் சீட்டு ஆடிக் கொண்டிருப்பார். அல்லது அந்த சீட்டுக் கார்டுகளின் பின்பக்கம் கிறுக்கித் தள்ளுவார். அல்லது பின்பக்கம் சென்று எழுதிக் கொண்டிருப்பார்.



அவர் அலுவலகம் இருந்த பள்ளியிலிருந்து வெளிவந்த 'ஓ மீஸ்' என்னும் பத்திரிகையில் ஃபாக்னர் புகைப்படத்தை வெளியிட்டு, 'முதுநிலைப் பட்டதாரிகள் கிளப்பின் பொறுப்பாளர். வேலை நேரம்: 11.30லிருந்து 12.30 வரை. வேலை நாள்: புதன்கிழமை மட்டும். நோக்கம்: தபால்களைச் சரியாக விநியோகிக்காமல் இருப்பது. நெடுநாள் குறிக்கோள்: இவரை மாதிரி ஒவ்வொரு வருஷமும் ஐம்பது போஸ்ட்மாஸ்டர்களை உருவாக்குவது!' என்று எழுதியிருக்கிறார்கள்.

ஈடோரா வெல்ட்டி என்னும் மற்றொரு பிரபல மிஸிஸிப்பி எழுத்தாளர், ஃபாக்னரின் தபாலாபீஸ் பற்றி இவ்வாறு எழுதுகிறார்: "இருபது வயதுகளில் இருக்கும் நாமெல்லாம் பள்ளிக்கூடத் தபாலாபிசில் இரண்டு சென்ட் தபால் தலை வாங்கக் கியூவில் நிற்கிறோம். ஆனால், அலுவலகத்தில் யாரும் கண்ணுக்குப் படவில்லை. கதவைத் தட்டுகிறோம். பதிலில்லை. மறுபடியும் கதவைத் தட்டி விட்டுத் திறந்து உள்ளே போகிறோம். ஓசை எதுவும் கேட்கவில்லை. எனவே, ஃபாக்னர் பெயரைச் சொல்லி உரக்கக் கத்துகிறோம். கடைசியில் அவர் வெளியே வருகிறார். அவரை வழி மறித்துக் கேட்கிறோம். தபால் தலைகளை விற்பது மற்றும் தபாலாபீசின் பிற பணிகளைச் செய்வதற்குப் பதிலாக மனிதன் பின்பக்கம் போய் உட்கார்ந்து கொண்டு கவிதை எழுதுகிறாராம்."

எப்படியோ மூன்று வருஷங்களைக் கடத்தி விட்டவருக்குக் கடைசியில் ஓலை வருகிறது. தபால் அலுவலக ஆய்வுக்கு வரும் அதிகாரி கீழ்க்கண்ட ரிப்போர்ட்டைச் சமர்ப்பிக்கிறார்: "நீர் உமது வேலைகளில் காட்டி வந்திருக்கும் அலட்சியம் சகிக்கவொண்ணாதது. வேலை நேரத்தில் வாடிக்கையாளர்களைக் காக்க வைத்துவிட்டுப் புத்தகங்களையும் சஞ்சிகைகளையும் படித்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறீர். நீர் இப்போது ஒரு புத்தகத்தை எழுதி வெளியிட்டிருக்கிறீர். தபால் அலுவலகத்தின் வேலை நேரத்தில் பெரும் பகுதியை இதை எழுதுவதற்கு உபயோகப்படுத்தி இருக்கிறீர்.

சில வாடிக்கையாளர்கள் உங்கள் மூலம் தமது தபால்களை அனுப்ப அஞ்சியிருக்கிறார்கள். ஏனென்றால், அவற்றை வாங்கிக்கொண்டு நீர் மூலையில் கடாசி எறிந்துவிடுவீர். இன்னும் சிலர் வெளியூருக்குப் போக நேருகையில் தமக்கு வரும் தபால்களை வெளியூர் விலாசத்துக்கு அனுப்பி விடுமாறு உம்மிடம் கேட்டுக்கொண்டு அதற்கான பணத்தையும் தந்துவிட்டுப் போனார்கள். ஆனால், அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமையை நீர் நிறைவேற்றவில்லை. ஹெச்.இ.ரே. ஜுனியர் என்பவருக்கு வந்த பார்சலுக்கு பத்து சென்ட் அவரிடமிருந்து வாங்கிக் கொண்டு அவர் கொடுத்த முகவரிக்கு அனுப்புவதற்குப் பதிலாகப் பார்சலை யார் அனுப்பி வைத்தார்களோ அவர்களுக்கே 'ஆசாமி முகவரியில் இல்லை' என்ற குறிப்புடன் திருப்பி அனுப்பி விட்டீர்.

தபால் பெட்டிகளை வாடகைக்கு எடுத்தவர்களின் தபால்களை அப் பெட்டிகளில்போடுவதற்குப்பதிலாகத் தபால் பெட்டிகளையே பூட்டி வைத்து விட்டுப் போயிருக்கிறீர் என்று பிராது இருக்கிறது.'



தொடர்ந்து, 'ஃபாக்னர் கடிதங்களை விலாசதாரர்களுக்கு ஒழுங்காக அனுப்புவதில்லை என்றும் அவற்றைத் தவறாகப் பிரித்துப் போடுகிறார் என்றும் அலுவலகத்துக்குள் 'அனுமதிக்கக் கூடாத நபர்களை' வரவேற்றுப் பேசிக்கொண்டிருக்கிறார் என்றும் தபாலாபீசுக்கு வரும் ஜனங்களுக்கு எந்த வித உதவியும் செய்யாமல் தட்டிக் கழிக்கிறார் என்றும் அலுவலக நேரத்தைக் கடைப்பிடிக்காமல் அவர் இஷ்டத்துக்கு திறந்தும் மூடியும் வைத்திருக்கிறார் என்றும் அலுவலக நேரத்தில் கோல்ஃப் விளையாடிக் கொண்டிருந்தார் என்றும்' வந்த புகார்க் கடிதங்களின் லிஸ்ட்டைத் தனது அறிக்கையில் தெரிவித்திருந்தார்.

மேலும், 'இவை எல்லாவற்றையும்விட மிக மோசமான நடத்தை என்ன என்றால் சந்தாதாரர்களுக்கு வரும் பத்திரிகைகளை அவர்களின் தபால் பெட்டிகளில் போடுவதற்குப் பதிலாக, வாசல் கேட்டருகே இருந்த குப்பைப் பெட்டியில் போட்டு வைத்திருந்திருக்கிறீர். வாடிக்கையாளர்கள் இந்தக் குப்பைகளை எடுத்துத் தேடி தங்கள் கடிதங்களை எடுத்துக்கொண்டு போகும் அளவுக்கு அவர்களைத் துன்புறுத்தியிருக்கிறீர்' என்றும் குற்றம் சாட்டியிருந்தார்.

முடிவில், 'இந்தக் குற்றச்சாட்டுகளுக்கு ஐந்து நாள்களில் பதில் அளிக்காவிட்டால் நீர் வேலையிலிருந்து நீக்கப்படுவீர்' என்று மேல் அலுவலகம் தெரிவித்தது.

ஃபாக்னர் ஐந்து நாள்களுக்குள் பதில் அளிக்கவில்லை! பின்னர் அனுப்பிய தனது பதிலில், 'முதலாளித்துவ சமூகத்தில் வாழும் என்னைப் போன்றவனுக்குப் பணம் படைத்தவர்களிடம் இருந்து இம்மாதிரி இடர்பாடுகள் வருவது ஆச்சரியத்துக்குரியது அல்ல. இரண்டு சென்ட் தபால் தலை வாங்க வருகிறேன் என்று என்னை ஆட்டிப் படைக்க நினைக்கும் ஒரு போக்கிரிக் கூட்டத்துக்கு அடிபணிந்து பணிபுரிய நான் விரும்பவில்லை. இதுவே என் ராஜினாமாக் கடிதம்' என்று எழுதி அனுப்பிவிட்டார்.

கிட்டத்தட்ட அறுபது வருஷங்களுக்குப் பின்... 1987இல் அமெரிக்கத் தபால் துறை புதியதொரு 22 சென்ட் தபால் தலையை ஃபாக்னரின் உருவப் படத்தோடு அவரது நினைவுச் சின்னமாக வெளியிட்டது!

(அடுத்த இதழில்: மார்க் ட்வெய்ன் - எழுபது வயதில் குட்டித் தேவதைகளை வழிபட்ட டாம் சாயர்)

ஸிந்துஜா <weenvy@gmail.com>

# பின்நகர்ந்த காலம்

## வண்ணநிலவன்

இப்போது சிறு பத்திரிகைகள் வாசகர் மத்தியில் 'கூத்துப்பட்டறை' என்ற பெயர் பிரபலமானது. 'கூத்துப்பட்டறை' நவீன நாடகங்களை நடத்துவதுடன், நடிகர்களுக்கு நடிப்புப் பயிற்சியும் அளித்து வருகிறது. கலைராணி, விஜய் சேதுபதி முதலான நடிகர்கள் கூத்துப்பட்டறையின் தயாரிப்புகள். மறைந்த ந. முத்துசாமிதான் கூத்துப்பட்டறையை நடத்தி வந்தார் என்பது எல்லோருக்கும் தெரியும்.

ஆனால், 1976இல் 'கூத்துப்பட்டறை'யைத் துவக்கியது இப்போது 'வீராச்சாமி' என்றழைக்கப்படும் ரங்கராஜன்தான். 'கூத்துப்பட்டறை' என்ற ஐயங்கார் குடும்பத்தைச் சேர்ந்தவர் ரங்கராஜன். ஸ்டேட் பேங்க் ஆஃப் இந்தியாவில் வேலை பார்த்தார். காஞ்சிபுரத்தில் அவருடைய குடும்பம் இருந்தது. சென்னை மாம்பலம் ரயில்வே ஸ்டேஷன் அருகில் இருக்கும் துர்க்காராம் தெருவில் ஒரு மாடி (இரண்டாவது மாடி)யில் நண்பர்களுடன் தங்கியிருந்தார். அவர் குடியிருந்த மாடி போர்ஷனுக்குக் கீழே முதல் மாடியில் ஓவியர் எஸ்.கிருஷ்ணமூர்த்தி தன் தாய், தங்கை, தம்பியுடன் வசித்து வந்தார். அப்போது கிருஷ்ணமூர்த்தி சினிமாவில் ஆர்ட் டைரக்டராக ஆகியிருக்கவில்லை. ஜீவனோபாயத்திற்காக ஆதம்பாக்கத்தில், துணிகளில் பொத்திக் வேலைப்பாடுகளைச் செய்துவந்தார்.

அவர் வீட்டுக்கும் கீழே, தெருவடிப் பகுதியில், இயக்குனர் கே.பாலசந்தரிடம் உதவியாளராக இருந்த அனந்து தன் குடும்பத்துடன் வாழ்ந்து வந்தார். அனந்து சாரின் வீட்டைத் தாண்டித்தான் மாடிப்படியேறி கிருஷ்ணமூர்த்தி, ரங்கராஜன் வசித்த அறைக்கெல்லாம் செல்ல வேண்டும். பூமணி முதன்முதலாக சென்னைக்கு மாறுதலாகி வந்தபோது, ரங்கராஜனின் அறை யில்தான் தங்கியிருந்தார். ரங்கராஜன், அப்போது வந்துகொண்டிருந்த 'பிரக்ஞை' என்ற சிற்றிதழிலும் சம்பந்தப்பட்டிருந்தார். அதன் புரவலர்களில் ரங்கராஜனும் ஒருவர்.

'பிரக்ஞை' இதழ் ஸ்டேட் பேங்க் ஆஃப் இந்தியாவில் பணிபுரிந்து வந்த சேதுராமன், ரகுராம், ரவி ஷங்கர், ரங்கராஜன் போன்ற நண்பர்களின் நிதியுதவி யினால்தான் நடந்தது. ரங்கராஜன் மிகுந்த இரக்ககுணம் மிக்கவர். பரோபகாரி. பிரக்ஞை நண்பர்கள் எல்லோரும் வங்கியில் பணிபுரிந்து வந்ததால், அதன் ஆசிரியப் பொறுப்பை ரவீந்தரனிடம் கொடுத்திருந்தனர் இயக்குனர் ஜெயபாரதியின் அண்ணன்தான் ரவீந்திரன். 'குடிசை' நாவலை எழுதிய து.ராமமூர்த்தியின் புதல்வர்கள்தான் ஜெயபாரதியும் ரவீந்திரனும். இவர்களுக்கு ஜெயராமன் என்ற ஒரு தம்பியும் ஒரு தங்கையும் உண்டு.



இந்தத் தங்கையைத்தான் எழுத்தாளர் சுப்பிரமணிய ராஜூ திருமணம் செய்துகொண்டார்.

காஞ்சிபுரம் சுற்றுவட்டாரத்தில் நிறையத் தெருக்கூத்துக்கள் நடக்கும். ஒருமுறை புரிசையில் நடந்த கன்னப்பத் தம்பிரான் குழுவினரின் கூத்தைப் பார்க்க ரங்கராஜன், முத்துசாமியை அழைத்துச் சென்றிருந்தார். அதன்பிறகு இருவரும் அடிக்கடி தெருக்கூத்து நடக்கும் இடங்களைத் தேடிச் சென்று பார்த்தனர். 'வெ. சா' என்ற வெங்கட் சாமிநாதனும் தெருக்கூத்தின் முக்கியத்துவத்தைப் பற்றி சிற்றிதழ்களில் கட்டுரைகளை எழுதினார். ரங்கராஜனும் ந.முத்துசாமியும் சேர்ந்து கூத்துப்பட்டறையை நிறுவினர்.

வீராச்சாமி என்ற ரங்கராஜன், மக்கள் கலை இலக்கியக் கழகத்தில் பணிபுரிய நினைத்தார். அதனால், கூத்துப்பட்டறையை நிர்வகிக்கும் பொறுப்பு ந.முத்துச்சாமியிடம் வந்தது. முத்துசாமியை அடிக்கடி க்ரியா ராமகிருஷ்ணன் வீட்டில் சந்திப்பேன். எப்போதும் தெருக்கூத்தைப் பற்றியே முத்துசாமி பேசுவார். புரிசை கண்ணப்பத்தம்பிரானை முத்துசாமி கொண்டாடினார்.

ஒருநாள் அவருடன் பேசிக்கொண்டிருந்தபோது, "நீங்க... கண்ணப்பத்தம்பிரானைப் பேட்டி கண்டு ஒங்க பத்திரிகையில் போட ஏற்பாடு பண்ணுங்களேன்..." என்றார்.

"துக்ளக்கில் போட முடியாது. வேற ஏதாவது பத்திரிகையில முயற்சி பண்ணிப் பார்க்கலாம்...." என்றேன். 'கல்கி' பத்திரிகையை மனதில் வைத்துக்கொண்டுதான் அப்படிச் சொன்னேன்.

முத்துசாமிக்கு ஒரே சந்தோஷம். "சீக்கிரமா ஏற்பாடு பண்ணுங்கோ.. ஒங்களைப் பார்க்க வரச் சொல்லட்டுமா?..."

'சரி' என்று தலையை ஆட்டினேன். முத்துசாமி என்னிடம் சொன்னது போலவே, கன்னப்பத்தம்பிரானை துக்ளக் அலுவலகத்துக்கு அனுப்பி வைத்துவிட்டார். முத்துசாமிக்கு, தெருக்கூத்தை எப்படியாவது பிரபலப்படுத்தி, அதைத் தமிழகம் பூராவும் பரப்பிவிட வேண்டும் என்று ஆசை. ஆனால், சினிமாவின் பின்னால் அலையும் தமிழர்கள், தெருக்கூத்தை வரவேற்பார்கள் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. ந. முத்துசாமி தெருக்கூத்தில்தான் எல்லாமே இருக்கிறது; இதைத் தமிழர்கள் ஆதரிப்பார்கள் என்று நம்பினார்.

கண்ணப்பத் தம்பிரான் மூன்று நான்கு நாள் தாடியுடன் இருந்தார். சாதாரண கிராமத்து மனிதரைப் போல் மிக எளிமையாக இருந்தார். சட்டைக்கு மேல் தோளில் துண்டை மடித்துப் போட்டிருந்தார். வெற்றிலைக் காவி படிந்த பற்கள். அவ்வளவு பெரிய கலைஞரை நாம் போய்ப் பார்க்காமல், நாமிருக்கும் இடத்துக்கு வரச் சொல்லிவிட்டோமே என்று மனம் பதறியது. கல்கிக்குத் தொடர்புகொண்டு கேட்டபோது 'பிறகு பார்க்கலாம்' என்ற

அக்ரஹாரத்தில் கழுதை



ந. முத்துசாமி

தகவலே கிடைத்தது. இத்தனைக்கும் அக்கால கல்கியில் உதவி ஆசிரியர்களாக இருந்த எஸ்.வி.எஸ்., குண்டு மணி எல்லோரும் பழக்கம்தான்.

ந.முத்துசாமியின் தமிழ் உரை நடைக்கென்று தனித்துவமான நடையழகு உண்டு. முன் மாதிரி இல்லாத உரைநடை அது. ஆனால், ந.முத்துசாமியை அவரது சிறுகதைகளுக்காக கொண்டாடுவதைவிட அவரது நாடகங்களுக்காக அதிகளவு கொண்டாட வேண்டும். அரசியல் மற்றும் சமூகத்தில் நிலவும் மேலாண்மைப் போக்குகளையும் அவற்றின் அபத்தங்களையும் தனது அப்பாவும் பிள்ளையும், காலங்காலமாக, சுவரொட்டிகள், நாற்காலிக்காரர் முதலான நாடகங்களில் மிகுந்த நவீன உணர்வுடன் எடுத்துக் கூறியுள்ளார். தமிழ் நவீன அபத்த நாடகத்தின் பிதாமகர் முத்துசாமி. நாடகத்தின் நவீனத்துக்கு அவர் அளித்துள்ள பங்கு வீச்சும் ஆழமும் மிக்கது. இதை சிறு பத்திரிகைகள் சார்ந்த அறிவு ஜீவிகள் கூடச்சரியாக அறிந்துகொள்ளவில்லை.

அவருக்குப் பிறகுதான் இந்திரா பார்த்தசாரதியையோ சே. ராமானுஜத்தையோ வேறு யாரையுமோ சொல்ல முடியும். இந்திரா



குடிசை ஜெயபாரதி



சத்யஜித் ராய்

பார்த்தசாரதியின் ‘மழை’யையும், ‘போர்வைபோர்த்திய உடல்’களையும் 70க்களில் பெரிதாகப் பேசினார்கள். ஆனால், முத்துசாமியின் காலங்காலமாக, நாற்காலிக்காரர் ஆகிய இரண்டு நாடகங்களும் முன்வைக்கும் நவீனத்தன்மைக்கு முன் அவை காணாமல் போய்விடுகின்றன. ந.முத்துசாமியின் நாடகங்களை வாசிக்கும் போதும், அவை நடிக்கப்படும்போதும், அவர் எவ்வளவு உக்கிரமான நாடகாசிரியர் என்பதை வெளிப்படுத்தி விடுகின்றன.

பலருடன் சில விஷயங்களில் ஒத்துப்போகும் ரசனை, வேறு சில விஷயங்களில் ஒத்துப்போவதில்லை. இப்படித்தான் ந.முத்துசாமிக்கும் எனக்கும் ‘அக்ரஹாரத்தில் கழுதை’ என்ற, ஜான் ஆப்ரஹாம் இயக்கிய திரைப்பட விஷயத்திலும் ஒத்துப்போகவில்லை. ‘அக்ரஹாரத்தில் கழுதை’ படத்திற்கு கதை - வசனம் எழுதியவர் வெங்கட் சாமிநாதன். அதை இயக்கிய ஜான் ஆப்ரஹாம், சென்னை அருணாசலம் ஸ்டூடியோவிலிருந்த பிரிவியூ தியேட்டரில் அப்படத்தைத் திரையிட்டார். அதற்கு ந.முத்துசாமியுடன் நானும் சென்றிருந்தேன். படம் முடிந்ததும் முத்துசாமி படத்தை ஆஹா, ஓஹோ வென்று புகழ்ந்தார். அதை அந்தக் காலத்தில் எல்லோரும் பாராட்டினார்கள்; குறிப்பாகச் சிறு பத்திரிகையுலகினர். ஆனால், படத்தின் கதையைத் தவிர, அந்தப் படத்தில் சொல்லிக்கொள்ளும்படியாக எதுவுமில்லை. ரொம்பச் சாதாராணமான படம் அது.

ரொம்ப சர்வ சாதாரணமான திரைப்படங்களைக்கூடக் கொண்டாடும் சிறுபத்திரிகை உலக நண்பர்களின் போக்கையும் ரசனையையும் இன்றும்கூட புரிந்துகொள்ள முடியவில்லை. இதுபோல் தேவையில்லாமல் கொண்டாடப்பட்ட படம் அரவிந்தன் இயக்கிய ‘காஞ்சன சீதா.’ ராமன், சீதை, லெட்சுமணனை எல்லாம் சாதாரண மனிதர்களாக அரவிந்தன் காஞ் சன சீதாவில் காட்டுகிறார் என்பது ஒன்றுதான் அப்படத்தில் உள்ள நல்ல விஷயம். மற்றபடி படத்தின் ஒளிப்பதிவு மகாமோசம். பின்னணி இசைகூட ரொம்பச் சாதாரணமானதே.

எனக்கே கூட சில மயக்கங்கள், தடுமாற்றங்கள்



ரித்விக் கட்டக்

**ஜெயகாந்தனின் ‘உன்னைப் போல் ஒருவன்’ கூட ஏராளமான குறைகள் உள்ள படமே. அவர் திரைக்கதை - வசனம் எழுதிய யாருக்காக அழுதான், சில நேரங்களில் சில மனிதர்கள், ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள் போன்ற படங்களும் சாதாரணமான படங்களே; ‘ஜெயகாந்தன்’ என்ற பிரபலஸ்தர் அப்படங்களில் சம்பந்தப்பட்டிருந்தார் என்பதைத் தவிர.**

அப்போது இருந்தன. ஆனால், சத்யஜித் ராய் (‘ரே’ என்பது சரியல்ல), மணிகௌல் போன்றவர்களின் படங்களைப் பார்த்த பிறகுதான் திரைப்படம் என்ற கலையின் முழுமை பிடிபட்டது. இதில் ரித்விக் கட்டக்கையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். தமிழில் இந்த உயரங்களை யாரும் தொடவில்லை. மலையாளத்திலும் இதுதான் உண்மை (அடூர் கோபாலகிருஷ்ணனையும் சேர்த்துத்தான்).

இந்தியாவில் சினிமாவை முழுமையாகப் புரிந்துகொண்டு, சிறப்பான கதைகளைக் கலாபூர்வமாக, பெரும்பாலும் தவறுகள் குறைகளின்றி இயக்கி வெற்றிபெற்ற ஒரே இயக்குநர் சத்யஜித்ராய் மட்டுமே. அவர் பரிபூரணமான திரைக் கலைஞர். வேறு எவரும் அவர் அடைந்த சிகரத்தைத் தொட முடியாதவர்களே.

தமிழில், என் நண்பர்களான ருத்ரையாவோ

ஜெயபாரதியோகூட சிறப்பான இயக்குநர்களல்ல. பாலு மகேந்திராவின் வீடு, சந்தியாராகம் போன்ற படங்களில் நல்ல கதையம்சம் இருக்கிறது. ஆனால், அவை திரைக் கலையாகவில்லை. ஜெயகாந்தனின் 'உன்னைப் போல் ஒருவன்' கூட ஏராளமான குறைகள் உள்ள படமே. அவர் திரைக்கதை - வசனம் எழுதிய யாருக்காக அழுதான், சில நேரங்களில் சில மனிதர்கள், ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள் போன்ற படங்களும் சாதாரணமான படங்களே; 'ஜெயகாந்தன்' என்ற பிரபலஸ்தர் அப்படங்களில் சம்பந்தப்பட்டிருந்தார் என்பதைத் தவிர.

பெர்க்மானின் படங்களில், காட்சிக்குக் காட்சி திரைக்கலை ததும்பி வழியும். நடிப்பு, இசைக் கோர்வை, கதையமைப்பு, ஒளிப்பதிவு என்று எல்லாமே, ஒரு பரிபூரணத்தை மொட்டவிழக்கும். இந்த வித்தை கைவரப்பட்ட ஒரே இந்திய இயக்குநர் சத்யஜித்ராய்தான்.

ஆனால், துக்ளக்கில் நான், சில நேரங்களில் சில மனிதர்கள், 16 வயதினிலே, முள்ளும் மலரும், உதிரிப்பூக்கள் போன்ற படங்களை பாராட்டித்தான் எழுதினேன். ஒரு பத்திரிகையாளன் என்ற வரம்பிற்குட்பட்டு, அந்தச் சமயத்தில் வெளிவந்த வெகுஜனத் திரைப்படங்களைவிட அந்தப் படங்களின் தரம் சற்று நன்றாக இருந்ததால்தான் அப்படி எழுதும்படி நேர்ந்தது. வெகுஜனத் திரைபடங்களின் அளவுகோலின்படி, அவை தேர்ச்சியடைந்த படங்களே, அவ்வளவுதான். இதில் முரண்பாடு எதுவுமில்லை.

(தொடரும்)

**வண்ணநிலவன் <ramachandran.u49@gmail.com>**

# புனைவால் பழி தீர்த்துக்கொண்டேன்

**டேமியன் ஸ்ஸிப்ரான்**
**தமிழில்: ராம் முரளி**

அர்ஜெண்டினாவைச் சேர்ந்த டேமியன் ஸ்ஸிப்ரான் இயக்கிய Wild Tales அதன் விநோதத் தன்மைக்காகவே உலகளாவிய பார்வையாளர்களை வெகுவாக கவர்ந்திருக்கிறது. ஒன்றுக்கு ஒன்று தொடர்பில்லாத ஆறு குறுங்கதைகள். சில நிமிட நேரத்தில் விரிகின்ற கதைகளின் போக்கில் பார்வையாளர்களை வசீகரிக்கும் தன்மையில் பெரு வெற்றி அடைந்திருக்கிறது. அர்த்தமற்ற குரோதத்தையும் பழிவாங்கும் உணர்ச்சியையும் மிகத் தீவிர நிலையில் வைத்து அணுகுகிறது. மனிதனின் சமநிலை சோதனைக்குள்ளாகும்போது, அவனது மனம் செயல்படுத்துகின்ற விசித்திரங்களைச் சுற்றியே கதைகள் உருவாக்கப்பட்டிருக்கின்றன. பல்வேறு விருதுகளும் Wild Tales திரைப்படத்துக்குக் கிடைத்திருக்கிறது.

கோலிடோர் இதழுக்கு டேமியன் ஸ்ஸிப்ரான் அளித்த நேர்காணலின் தமிழாக்கம் இது.

**இந்த திரைப்படத்தின் துவக்க நிலை பணிகள் எப்படி துவங்கப்பட்டன?**

இது விருப்ப உணர்வுடன் துவங்கப்பட்ட படம் அல்ல. நான் வேறு சில முழு நீளத் திரைப்படங்களை உருவாக்கத் திட்டமிட்டிருந்தேன். ஒரே சமயத்தில், அறிவியல் புனைவு திரைக்கதைகளையும் வெஸ்டர்ன் வகை கதை ஒன்றையும், அதோடு, நகைச்சுவையான காதல் கதை ஒன்றையும் எழுதிக் கொண்டிருந்தேன். அக்காலகட்டம் எனக்கு மிகுந்த படைப்பூக்கம் அளிக்கின்ற தருணமாக இருந்தது. அதனால், புதிது புதிதாக முளை விடுகின்ற மற்றைய எண்ணங்களை பெரும் திரைக்கதைகளாக வளரவிடாமல், குறுகிய வடிவம் கொண்ட கதைகளாக மாற்றி எழுதினேன். ஏனெனில், நான் வேலை செய்துகொண்டிருந்த திரைக்கதைகளின் எண்ணிக்கை அதிகரித்துவிடும் என்பதால், இவற்றைச் சிறு வடிவத்தில் நிலைக்கச் செய்வது சரியாக இருக்கும் என்று நினைத்தேன். இறுதியில், எனக்கு இந்த வீரியமிக்க சிறுகதைகள் கிடைத்திருந்தன. முதலில் அவைகளை வைத்து என்ன செய்வது என்று தெரியவில்லை என்பதால், தொடர்ச்சியாக அக்கதைகளைச் செழுமைப்படுத்தியபடியே இருந்தேன்.



நீண்ட காலம் எனக்குள் இக்கதைகள் வளர்ந்துகொண்டிருந்தன. ஒரு திரைப்பட படைப்பாளியாக சமயங்களில் சில கதாபாத்திரங்களுடனும் சூழல்களுடனும் பல மாதங்கள் அல்லது பல வருடங்கள் வரையிலும்கூட நீங்கள் வாழ வேண்டியிருக்கும். ஒரு நாளின் விடியலில் எழுந்து தங்களது படைப்பை வடிவமைத்து நிறைவு செய்துவிடுகின்ற ஓவியர்களையோ அல்லது இசை அமைப்பாளர்களையோ பார்த்து நாம் பொறாமைப்படவும் வாய்ப்பிருக்கிறது. இந்த கதைகளின் வளர்ச்சி நிலையின்போது நான் அதனை அனுபவப்பூர்வமாக உணர்ந்திருக்கிறேன். ஒரு கதையை நான் நள்ளிரவில் எழுதுவேன். மற்றொன்றை மதிய நேரத்தில் எழுதுவேன்.

மூன்றாவது அல்லது நான்காவது கதைகளை எழுதும்போது, இந்த கதைகள் அனைத்திற்கும் ஒரு ஒற்றுமை தன்னியல்பாக உருவெடுத்திருப்பதை என்னால் உணர முடிந்தது. இவை ஒரே உலகத்தைச் சேர்ந்த ஒரே டிஎன்ஏவில் இருந்து உயிர்ப்பு கொண்டிருந்தன. ஒவ்வொரு கதையிலும் நான் எண்ணியிருந்ததை விடவும் பெரிதளவில் எனக்குக் கிடைத்திருப்பதாக உணர்ந்துகொண்டேன். இவை அனைத்தும் ஒரே ஆல்பத்தை சேர்ந்தவையாக இருந்தன. ராக் அல்லது ஜாஸ் இசைத் தொகுப்புகளைப் பார்க்கும்போது, அவற்றில் ஒரு இசைத் துணுக்கு ஏழு நிமிடத்தில் உருவாகியிருக்கும். பிறிதொன்று 25 நிமிட நீளத்தில் உருவாகியிருக்கும். எனினும், இவை அனைத்தும் ஒரே இசை கருவிகளின் மூலமாக, ஒரே கருப்பொருளைத்தான் அடிப்படையாகக் கொண்டு உருவாகின்றன.

எனது உணர்தல் இல்லாமலேயே, என் கையில் ஒரு முழு நீள திரைப்படத்துக்கான திரைக்கதை கிடைத்திருந்தது. எனது தயாரிப்பாளர்களான கேஎன்எஸ் நிறுவனத்தைச் சேர்ந்த ஹூகோ சிக்மேன், மாத்தியாஸ் மோஸ்த்ரீன் இருவரிடமும் இந்த திரைக்கதையை நான் கையளித்ததும் உடனடியாக அவர்கள், "இல்லை. இல்லை. நீ இதனை உடனடியாக செய்தாக வேண்டும். இவை வீரியம் மிகுந்ததாகவும் அழகானதாகவும் அதோடு படைப்பு சுதந்திரத்தின் முன்மாதிரியான கதைவெளியாகவும் இருக்கிறது" என்றார்கள். அதனால், "அப்படியென்றால் நான் இந்த பணிகளைத் துவங்குகிறேன்" என்றேன்.

**ஒற்றைய மையத்தால் பிணைக்கப்பட்டிருக்கும் ஆறு குறுங்கதைகளை எழுதி இயக்குவது ஒரு திரைப்பட படைப்பாளியாக சுவாரஸ்யம் மிகுந்த செயலாக இருந்ததா?**

ஆமாம். எனக்கு தனிப்பட்ட வகையில் இந்த திரைப்படம் நான் செய்ய நினைத்த பல்வேறு செயல்களின் ஒருங்கிணைந்த வடிவமாகப்பட்டது. சோனி பிக்சர்ஸ் கிளாசிக்ஸ் நிறுவன பட வினியோகஸ்தரான மைக்கேல் பார்க்கர் உடன் பேசிக்கொண்டிருக்கும்போது, "இது நன்கு பரிமாறப்பட்ட உணவுபோல இருக்கிறது. துவக்கநிலை உணவு, இரண்டாம் நிலை உணவு, அடுத்து பிரதான மையநிலை உணவு, பிறகு ஜீரண பதார்த்தம், இறுதியில் காபி என அடங்கியிருக்கிறது" என்றார். இதே வகையிலான உணர்வை இந்த கதைகளை எழுதும்போதும் இயக்கும்போதும் நானும் உணர்ந்திருக்கிறேன்.



**பழிவாங்கும் உணர்ச்சியை வைத்து இத்தகைய குறுங்கதைகள் எழுத வேண்டும் என்கின்ற உந்துதல் எப்படி உருவானது?**

உண்மையை சொல்ல வேண்டுமென்றால், இந்த கதையை எழுதியபோது, அத்தகைய கருப்பொருளை எல்லாம் திட்டமிட்டு உருவாக்கவில்லை. திரைக்கதையை எழுதி நிறைவு செய்ததற்கு பிறகுதான், பழிவாங்கும் உணர்வு அனைத்தும் கதைகளிலும் அடிநாதமாக இருந்திருக்கிறது என்பதைப் புரிந்துகொண்டேன். இவை அனைத்தும் சுய வாழ்வின் அனுபவங்களில் இருந்து உருவானவை என்றுதான் என்னால் சொல்ல முடியும். ஒவ்வொரு கதையின் துவக்கத்தையும் எனது வாழ்வில் நான் எதிர்கொண்ட சம்பவங்களில் இருந்துதான் உருவாக்கினேன். அதாவது உண்மை சம்பவத்தின் ஒரு பிம்பத்தை மட்டும் எடுத்துக்கொண்டு, அதன் மீது எனது புனைவாக்கத்தை நிகழ்த்தினேன்.

உதாரணத்திற்கு, நான் சென்றிருந்த திருமண நிகழ்வொன்றில், மணமகன் அல்லது மணமகள் இருவரில் ஒருவருக்குத் தெரியாத சிலவற்றை

அங்கிருந்து ஏனைய அனைவரும் தெரிந்து வைத்திருந்தார்கள். அதுபோல, சிறுவயது முதலே நான் ஒருவரைத் தெரிந்து வைத்திருந்தேன். வன்மம் மிகுந்த தனிமையில் வாழ்ந்துவந்த அவர் நள்ளிரவுகளில் எனது தந்தைக்கு பல்வேறு விதமான தொந்தரவுகளையும் மிரட்டல்களையும் போன் கால் மூலமாக விடுத்திருக்கிறார். இரவு நேரத்தில் உணவு விடுதிக்குள் வருகின்ற அரசியல்வாதியின் கதையை எழுதும்போது இந்த மனிதரை நான் நினைத்துக்கொண்டேன். சாலையில் நிறுத்தியிருந்த எனது கார் ஒன்றை போக்குவரத்து காவலர்கள் தூக்கிச் சென்ற நிகழ்வை வைத்து மற்றொரு கதையை எழுதினேன். அவர்கள் வெறுமனே, “பார்க்கிங் தடைசெய்யப்பட்ட பகுதியில் உங்கள் கார் நின்றிருந்தது” என்றார்கள். அதனால், அந்த அமைப்பு எப்படி செயல்படுகிறது என்பதை அறிந்துகொண்டேன். அதோடு, பார்க்கிங் டிக்கெட் வாங்கச் செல்லும்போது, ஏராளமான வரிசைகளைக் கடந்து செல்ல வேண்டியிருந்தது. இதெல்லாம் என்னை பாதித்த நிகழ்வுகள்.

அந்த அதிகாரத்துவ அடுக்கு மிக துல்லியமாக வடிவமைக்கப்பட்டிருக்கிறது என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. அதுவொரு விபத்துகூட இல்லை. ஆனால், நீங்கள் இவர்களை அணுக செல்கின்றபோது அது மிகுந்த சோர்வூட்டும் செயலாக அமைந்துவிடுகிறது. நம்மிடம் இருந்து பணத்தை மட்டும் சரியாக பெற்றுக்கொள்ளும் அவ்வமைப்பு, நமது புகார்களை ஒரு பொருட்டாகவே கருதுவதில்லை. மற்றொரு சம்பவம் சாலையில் காரில் பயணித்துக் கொண்டிருக்கும்போது, எனக்கு வேறொரு காரோட்டியுடன் வாக்குவாதம் ஒருமுறை ஏற்பட்டது. பழைய காரில் பயணித்த அந்த மனிதன் நான்தான். அவர் என்னை மிக கேவலமாக அவமானப்படுத்திவிட்டு, தனது ஆடி காரில் பறந்துவிட்டார்.

அதனால், புனைவில் இவர்களை எல்லாம் பழிதீர்க்க முடிவு செய்தேன். அப்படித்தான் இக்கதைகள் பிறப்பெடுத்தன. காரில் பயணித்தபடியே நினைத்துக்கொண்டேன். “என்னை அவமானப்படுத்திய மனிதர் சில அடி தூரத்தில், தனது காரின் பின் சக்கரம் பஞ்சர் ஆகி நிர்க்கதியாக நின்றிருந்தால் எப்படி இருக்கும்?” எனக்கு பதிலாக, ஒரு பலம் பொருந்திய மனிதர் இவ்விடத்தில் இருந்திருந்தால், அவர் பழி தீர்க்க விரும்பினால் என்னவாகும்? என நினைத்தேன். உடனடியாக, “ஆஹா, இது மிக அற்புதமான எண்ணமாக இருக்கிறது” என்று எனக்குள்ளாக நினைத்துக்கொண்டேன். எனது பயணத்தை இடையிலேயே நிறுத்திவிட்டு, இந்த கதையை எழுதத் துவங்கினேன்.

நான் என்ன செய்தேன் என்றால், நிஜ வாழ்க்கையில் எனக்கு நேர்ந்த அனுபவங்களை தொகுத்து, அதனைப் புனைவால் மாற்றி உருவாக்கினேன். திரைப்படத்தின் ஒவ்வொரு காட்சியையும் புனைவின் சாத்தியங்களைக் கொண்டாடுவதாக நீங்கள் உணருகிறீர்கள். யதார்த்த உலகின் நாடகீய தருணங்களாக அல்லாமல், ’ஹிட்ச்காக் வழக்கும்’ எனும் தொலைக்காட்சி தொடரின் மேம்பட்ட ஒரு அத்தியாயமாகவோ அல்லது டிவைலைட் ஸோனின் ஒரு பகுதியாகவோ அல்லது அமேஸிங் ஸ்டோரீஸின் ஒரு அங்கமாகவோ பார்க்கிறீர்கள். இது மிக புதியதாக இருக்கிறது.

**படத்தில் மிகச் சிறந்த நடிகர்கள் நடித்திருக்கிறார்கள். இதனை எப்படி சாத்தியப்படுத்தினீர்கள்?**

இவர்கள் அனைவருமே அர்ஜெண்டினாவின் மிக சிறந்த நடிகர்கள். இவர்கள் எல்லோரையும் ஒரே திரைப்படத்தில் இதுவரையில் நீங்கள் பார்த்திருக்க வாய்ப்பேயில்லை. ஏனெனில், ஒவ்வொருவரும் அவரவர் நடிக்கும் திரைப்படங்களில் மைய கதாபாத்திரமாக நடிப்பவர்கள். ஆனால், இந்த திரைப்படத்தின் தன்மை இவர்கள் எல்லோரையும் அணுகும் வாய்ப்பை எனக்கு உருவாக்கிக் கொடுத்தது. அவர்கள் இந்த திரைக்கதையை முழுமையாக உள்வாங்கிக் கொண்டார்கள். எனினும், எனக்கு அவர்கள் ஒவ்வொருவரும் பத்து தினங்களுக்கு மட்டுமே தேவையாய் இருந்தார்கள். இவை குறுங்கதைகளாக இருந்ததால், மாதக்கணக்கில் அவர்களின் தேவை இருக்கவில்லை. அதனால், அவர்களை எல்லோரையும் நாங்கள் அணுகினோம். ஒவ்வொருவருமே தனித்துவம் மிகுந்த நடிகர்கள். பலரும் மேடை நாடகத்துறையில் இருந்து வந்தவர்கள். மிகுதியான திறன்கொண்ட மனிதர்களுடன் இணைந்து வேலை செய்யவே நான் விரும்பினேன். நடிகர்கள் மட்டும் அல்லாமல், எனது திரைப்படத்தின் இசையமைப்பாளர், ஒளிப்பதிவாளர், எனக்குக் கிடைத்த தயாரிப்பாளர்கள் என அனைவருமே மேம்பட்ட கலைஞர்கள். அதனால், ஒரு கூட்டு உழைப்பாக உருவான இத்திரைப்படத்தின் இயக்குநராக நான் இருந்திருக்கிறேன் என்பதில் எனக்கு மிகப்பெரிய மகிழ்ச்சி உருவானது.

**உங்களது படைப்பாக்க குழுவினர் பற்றியும் அவர்களது பங்களிப்பு பற்றியும் பகிர்ந்துகொள்ள முடியுமா?**

ஒளிப்பதிவாளர் ஜேவியர் ஜூலியா, தயாரிப்பு கட்டுப்பாட்டாளர் க்ளாரா நோடாரி, இசையமைப்பாளர் குஸ்டோவா சாண்டோலோலா. இவர்கள் அனைவருமே மிகுதியான திறமைசாலிகள். இதுவொரு கனவைப்போலத்தான் இருக்கிறது. நாம் வியக்கின்ற கலைஞர்கள் அனைவரும் ஒரே இடத்தில் சங்கமிக்கச் செய்யும்போது, திரைப்படம் வடிவ ரீதியில் வேறொரு தளத்திற்கு நகர்ந்துவிடுகிறது. இவர்களுடன் எனது படைப்பாக்கச் செயல்பாட்டைப் பகிர்ந்து உழைத்திருக்கிறேன் என்பது என் வாழ்நாள் பெருமையாகும். இதுவொரு கணவன் - மனைவி போன்ற கூட்டணி. இருவருக்குமிடையில் ஒருமித்த உணர்வு உருவாகின்றபோது, வாழ்க்கை மேலும் மேன்மை அடைகிறது.

உதாரணத்திற்கு, குஸ்டோவாவை எடுத்துக் கொள்ளுங்கள். பேபல், புரோக்பேக் மவுண்டன் திரைப்படங்களுக்காக இருமுறை சிறந்த இசையமைப்புக்காக ஆஸ்கர் விருதுபெற்றவர் அவர். குஸ்டோவா அர்ஜெண்டினாவைச் சேர்ந்தவர் என்றாலும் இதில்தான் முதல்முறையாக ஒரு அர்ஜெண்டேனிய இசையை அவர் வடிவமைத்திருக்கிறார். அவர் எனது திரைப்படத்தில் இருக்கிறார் என்கின்ற உணர்வே அலாதியானது. பெரும் இசைப் படைப்பாளியான அவர் மிகச் சிறந்த பண்புகளைக் கொண்ட மனிதரும்கூட.



ஒவ்வொருவரும் தனது பணியினை நேசிப்புடன் அணுகும்போது, அந்த கூட்டுழைப்பு படத்தினை செறிவுப்படுத்தும்போது பார்வையாளர்களும் அதனை உணர்ந்து அனுபவிக்கிறார்கள் என்று நினைக்கிறேன்.

படப்பிடிப்பு காலம் எவ்வளவு?

ஒட்டுமொத்த திரைப்படமும் எட்டு வார காலத்தில் படம் பிடிக்கப்பட்டது.

முழுமையடைந்த திரைப்படத்தின் முதல் வெட்டு (First Cut) எவ்வளவு நீளம்கொண்டது?

நான் என்ன செய்கிறேன் என்றால், படத்தொகுப்பு அறையில்தான் அதிக வேலை செய்கிறேன். படத்தொகுப்பு அறையில் மாதக்கணக்கில் இருந்திருக்கிறேன். படத்தொகுப்பு கருவியை எனது அறைக்கு கொண்டுவந்து, அதனுடன் ஆறேழு மாதங்கள் வாழ்ந்திருக்கிறேன். எனக்குத் திருப்தி உருவாகும் வரையில், எவரொருவருக்கும் எனது படத்தைக் காண்பிக்கும் வழக்கம் எனக்கு இல்லை. தொடர்ந்து படத்தொகுப்பில் வேலை செய்துகொண்டிருக்கவே விரும்புகிறேன். ஓரளவுக்கு மனநிறைவு உருவான பிறகுதான், மற்றவர்களிடம் காண்பிப்பேன்.

இப்படிக் காண்பிக்கப்படும் திரைப்பிரதி, முதல் வெட்டு அல்ல. தயாரிப்பு குழுவினரிடம் காண்பித்து, அவர்களது கருத்துக்களைத் தொகுத்துக்கொண்டு, மீண்டும் படத்தொகுப்பு செய்ய ஆரம்பித்துவிடுவேன். திரைக்கதை எழுத்தும் இவ்வகையில்தான் என்னளவில் செயலாற்றுகிறது. பகுதி அளவில் எழுதிய திரைக்கதையைக் காண்பித்து, “இதனை நான் எழுதி இருக்கிறேன்” என்றெல்லாம் சொல்லும் வழக்கம் எனக்கு கிடையாது. தயாராகிவிட்டதாக முழு நிறைவுடன் நான் நம்பிய பிறகுதான், மற்றவர்களிடம் காண்பிக்க ஆரம்பிப்பேன். என்னை பொறுத்தவரையில், படத் தயாரிப்பாளர்தான் முதல் பார்வையாளர்கள். அதனால், அவர்களை நான் திருப்தி படுத்தியாக வேண்டும். அதனால், முதல் வெட்டு மூன்று மணி நேரம் ஓடக்கூடிய அளவில் தயார் செய்திருக்கிறேன் என்று சொல்வதற்கெல்லாம் இடமே இல்லை. இது அசலான சதையைப் போன்றது. அதில் தேவையற்ற கொழுப்புக்கு எல்லாம் இடமில்லை. திரைக்கதை எழுதும்போது, எதுவெல்லாம் தேவை இல்லையோ அதனையெல்லாம் அப்போதே தவிர்த்துவிடுவேன். இதனை நான் மிகத் தெளிவாக, பொருளாதார ரீதியில் பிசகில்லாத படைப்பாக உருவாக்கவே விரும்புகிறேன்.

இந்த எண்ணத்தின் மீதான திரைக்கதை எழுத்து முயற்சியில் நான் நிறைய பயின்றிருக்கிறேன். அதனால், தேவையற்ற சொற்களை திரைக்கதையில் சேர்ப்பதில்லை. உங்களிடம் ஒரேயொரு விரிவான சம்பவ தொடர்ச்சிதான் இருக்கிறது. அதனால், அதனை மூன்று மணி நேரமெல்லாம் தொகுத்துக் கொண்டிருக்க வேண்டியதில்லை. சில சமயங்களில் நான் இப்படி செய்திருக்கிறேன்

என்றாலும் பெரும்பாலான நேரங்களில் கச்சிதமான படத்தொகுப்பைதான் செய்கிறேன். படப்பிடிப்பு தளத்தில் வேலை செய்யும்போது, இதனை நான் கவனத்தில் வைத்திருக்கிறேன்.

ஹிட்ச்காக் ஒருமுறை குறிப்பிட்டிருக்கிறார். இரண்டு நபர்கள் ஒரு மருத்துவமனையில் சண்டையிட்டுக் கொள்கிறார்கள் என்றால், அவ்விடத்தில் துப்பாக்கியைப் பயன்படுத்த வேண்டிய அவசியமில்லை. அந்த சூழலில் என்ன பொருள் கிடைக்குமோ அதை மட்டும் பயன்படுத்தினால் போதுமானது. காரில் இதுபோல ஒரு சம்பவம் நிகழ்கிறதென்றால், காருக்குள் என்ன பொருள் கிடைக்குமோ அதுதான் ஆயுதமாகப் பயன்படுத்தப்பட வேண்டும். எனக்கு இதுப் பிடித்திருக்கிறது.

**இந்த திரைப்படத்தின் உருவாக்கத்தின்போது, உங்களை பற்றி என்ன தெரிந்துகொண்டீர்கள்?**

ஆஹா. நிறைய கற்றிருக்கிறேன். இந்த திரைப்படத்தை உருவாக்குவதற்கு முன்பு, இதன் உருவாக்கத்திற்குத் தேவையான உபகரணங்களை நான் வைத்திருக்கவில்லை. இந்த பட உருவாக்கத்தின் போதுதான் அவைகளை வடிவமைத்து பயன்படுத்திக் கொண்டேன். Wild Talesக்கு முன்னதாக நான்கு செயல்களைச் செய்திருக்கிறேன். இரண்டு முழு நீள திரைப்படங்களும் இரண்டு தொலைக்காட்சி தொடர்களையும் இயக்கி இருக்கிறேன். ஒரே சமயத்தில், எழுத்து பணியையும் படம்பிடிப்பு பணியையும் படத்தொகுப்புப் பணியையும் மாற்றி மாற்றி செய்து கொண்டிருந்தேன். இது ஒருவகையிலான பயிற்சி முறைதான் என்றாலும் நாள் போக்கில் ஒரு இயக்குநருக்கு அவரது படைப்பாக்க செயல்பாட்டில் இது மிகப்பெரிய இடர்பாட்டை உருவாக்குகிறது என்பதை உணர்ந்துகொண்டேன். படப்பிடிப்பை நன்கு திட்டமிட்டு முன் ஆயத்த பணிகளைப் படப்பிடிப்பு துவங்கும் முன்னதாகவே நான் மேற்கொண்டிருக்க வேண்டும் என்று விரும்பினேன்.

இந்த திரைப்படத்தின் உருவாக்க பணிகள் துவங்கியபோது, படப்பிடிப்பு தளத்திலேயே என் முழு நேரத்தையும் செலவிடத் துவங்கிவிட்டேன். அவ்விடத்திலேயே உறங்கவும் ஆரம்பித்துவிட்டேன். கதை உணர்வை உள்ளும் புறமுமாக உள்வாங்கிக்கொள்வதற்காக, ஒவ்வொரு கதாபாத்திரத்தையும் பல்வேறு வகையில் குறுக்கீடுகளை நிகழ்த்திப் புரிந்துகொள்ள முயன்றேன். இந்த திரைப்படம் முழுக்கவும் இதுபோல ஏதோவொன்று நிகழ்ந்துகொண்டுதான் இருந்தது. உதாரணத்திற்கு, திரைப்படத்தின் ஒரு பகுதியில், காரின் உட்புறத்தில் இருந்து வெளிப்புறத்துக்கு நகர்கையில், ஒட்டுமொத்த செய்கையின் முட்டாள்தனத்தையும் நம்மால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால், மறுபடியும் நீங்கள் காருக்குள் நுழைந்துவிடும்போது, நீங்கள் தப்பிக்கவும் உங்களைத் தற்காத்துக்கொள்ளவும் முயல்கிறீர்கள். இது அபாயகரமானதாகவும் அதே நேரத்தில் கேளிக்கையான நிகழ்வைப்போலவும் இருந்தது.

**பெத்ரோ அல்மோதவர், அகஸ்டின் அல்மோதவர் தயாரிப்பாளர்களாக என்ன வகையிலான பங்களிப்பை இந்த படத்துக்கு செய்திருக்கிறார்கள்?**

உண்மையில், நான் அவர்களை முன்னதாகவே சந்தித்திருக்கிறேன். 2006இல் வெளியான எனது முந்தைய திரைப்படத்தை அவர்கள் பார்த்திருக்கிறார்கள். அந்த படத்தின் பெயர் On Probation. அர்ஜெண்டினிய திரைப்படமான அதனை ஒரு திரையரங்கத்தில் அவர்கள் பார்த்திருக்கிறார்கள். அந்த திரைப்படம் இருவரையும் வெகுவாக கவர்ந்திருக்கிறது. அதனால், என்னைச் சந்திக்க வரும்படி அழைத்தார்கள். என்னிடம் படத்தைப் பற்றி புகழ்ந்து பேசினார்கள். அதன்பிறகு, அர்ஜெண்டினாவுக்கு அகஸ்டின் வந்தபோது, இருவரும் சேர்ந்து இரவு உணவை ஒன்றாக சாப்பிட்டோம். அப்போது எனது அடுத்த திரைப்பட முயற்சி பற்றி விசாரித்த அகஸ்டின், தானும் பெத்ரோவும் இணைந்து எனது அடுத்த திரைப்படத்தைத் தயாரிக்க விரும்புவதாக தெரிவித்தார்கள். ஆமாம். அது என்னை பெரிதளவில் நெகிழ்வுகொள்ள செய்தது. அந்த தருணத்தில் பெருமையாக உணர்ந்தேன்.

இந்த திரைப்படத்தை உருவாக்கலாம் என்று முடிவு செய்த உடன், அர்ஜெண்டினாவில் எனது தயாரிப்பாளராக இருந்த ஹூகோ சிக்மேனும் நானும் திரைக்கதையை பெத்ரோ, அகஸ்டின் அல்மோதவருக்கு அனுப்பி வைத்தோம். அவர்களும் உடனடியாக ஆர்வத்துடன் இதில் இணைந்துகொண்டார்கள். பெத்ரோ தனக்கென தனித்த படத் தயாரிப்பு நிறுவனத்தை வைத்திருக்கிறார். சுதந்திரமான சூழலில் படைப்பாளி இயங்க வேண்டும் என்கின்ற எண்ணத்தில் நம்பிக்கை கொண்டவர் அவர். அவருக்கு எப்போது தோன்றுகிறதோ, அல்லது எப்போது தேவை ஏற்படுகிறதோ அப்போதுதான் படப்பிடிப்புக்குச் செல்கிறார். அதனால், அவர் திரைப்படங்களைத் தயாரிக்கின்றபோதும் அதே வகையிலான சூழலை மற்றைய இயக்குநர்களுக்கும் உருவாக்கிக் கொடுக்க விரும்புகிறார்.

அவர் என்னிடம், “திரைக்கதை அற்புதமாக இருக்கிறது. இதிலிருந்து ஒரு நிறுத்தல் குறியைக்கூட மாற்ற வேண்டாம். உனக்கு மட்டும்தான் இதனை எப்படி படமாக்க வேண்டும் என்று தெரியும். அதனால், மற்ற எவரைப் பற்றியும் நீ கவலைப்படத் தேவையில்லை. அதனால், உனது கலையை உன் விருப்பம்போல செய்” என்று ஊக்கமளித்தார். அவ்வளவுதான். பிறகு, நிறைவடைந்த படத்தை நான் அவரிடத்தில் காண்பித்தேன். இருவரும் திரைப்படத்தைப் பற்றி உரையாடினோம்.

அவர் உலகம் முழுக்க அறியப்பட்ட இயக்குநர். அதனால், எனது திரைப்படத்துக்கு வெளியுலக கவனிப்பு தேவைப்பட்டதால், கேன்ஸ் திரைப்பட விழா போன்ற இடங்களில் எனது திரைப்படம் கலந்துகொள்ள அவரே முதல்நிலையில் நின்று விளம்பர தூதராகச் செயல்பட்டார். கேன்ஸில் ஊடக நேர்காணலிலும் கலந்துகொண்டார். பல்வேறு நாடுகளுக்குப் படத்தை எடுத்து சென்று பலரையும் பேச வைத்தார். எனது திரைப்படம் பெரும் புகழ்பெற்றதற்கு அவரே காரணம். கிட்டதட்ட இப்படத்தின் பெரும் பாதுகாவலராகவும் பொறுப்பாளரும் செயல்பட்டார். ●

**ராம் முரளி <raammurali@gmail.com>**

# கேப்டன் ‘குட்டன்’



ஆகாசமுத்து

அடர்காட்டில் எதிர்பட்ட காட்டெருமைகளைக் கைகாட்டி
உற்சாகச் சிறார்கள் பகவதி அம்மா... பகவதி அம்மா... என கும்பிட்டார்கள்
சட்டென தலைக்குமேல் பறந்த காட்டுக்கோழிக்குப் பயந்தபோது
“ஏன் மாமா இப்படிக் கத்தறீங்க...
பயப்பட்டாலும் மனசுக்குள்ளேயே கத்திக்கோங்க...
அதுங்க பாதைய நாம மறிக்காம இருந்தா போதும்..
நம்மள பாத்துட்டு விலகிப் போயிடும்”
‘கேப்டன்’ தாத்தா எங்களுக்கு சொல்லிருக்கு என்றார்கள்.

மலைத்தொடரின் அனேகச் சுற்றளவைக் கையகப்படுத்தி
தேயிலைத் தொழிற்சாலையாக்கிய அதிகார பினாமியின் ஊர்திச்
சக்கரத்திற்கு
பள்ளிவிட்டுத் திரும்பிய தன் சின்னஞ்சிறு மகனைக் காவுகொடுத்த குட்டன்
மனுநீதி வேண்டி காலிங் பெல்லைக் கூட
அழுத்த முடியாத தூரத்தில் உதைத்துத் தள்ளப்பட்டான்.

மார்பின் தினவெடுப்பு புருவத்திரட்சி உலோகக்குரல்
ஆழக்கூட்டில் துரத்தப்படும் மிருகத்தின் இளைப்பு
மலைநாட்டின் குவிந்த சருகுகளின் மடியெல்லாம் எச்சிலொழுக முகர்ந்து
மூதாதையர் எலும்புகளைத் தேடிய வேட்டையை
கனன்று சிவந்த அவன் கண்கள் மொழிந்தன.

புலி சிறுத்தைகளுக்குத் தப்பி மரமேறிய கால்கள்
நாடுமுழுதும் லாரி ஓட்டுனனாக நிலமளந்த கரங்கள்
யானையின் துதிக்கை காய்ப்பாய் பருத்திருக்கிறது.
மனித கருணையின் போதாமையை சோராது அவையில் எடுத்தியம்பவே
போதை வஸ்துக்களால் தன்னுடலை அடிக்கடி கீறிக் கொள்கிறான்.
அவனது தும்பிக்கை பருமனான வாஞ்சையின் பிடியைத்
தாளமுடியாதுதான்
பெண்களும் சிறார்களும் கேப்டன் கேப்டனென்று சிதறியோடுகின்றனர்.

கூன் விழுந்தவர்கள் அக்குறிஞ்சியில் யாருமில்லை
குனிந்த மலைமேடுகளில் சாய்ந்து நிமிரும்நடை இயற்கையின் விதி.
கேப்டன் ‘குட்டனுக்கு’ உள்ளமும்கூட கூனில்லை.
அவனது வளர்ப்புக் காட்டெருமையின் நெய்யை
மண்சட்டியிலிட்ட பருப்புச் சோற்றில் பிசைந்து
நண்பர்கள் ஒன்பது பேருக்கு பகிர்ந்தளித்தான்.
கடும்பனியிலும் உறையாத கதகதப்போடு
மணக்கிறது அவனது நெய்வீடு ●

ஆகாசமுத்து<aakaasamuthup@gmail.com>

# நேசத்தை இசைத்த பறவை பற்றிய குறிப்புகள்

இளங்கோ
ஓவியம்: கிருஷ்ணமூர்த்தி

**சிறகசைப்பு - 01**

பனியுறைந்து பாளங்களாய் மரங்களிலிருந்து விழுகின்ற பொழுதை வெறித்தபடி இருக்கின்றேன். காற்று ஊளையிட்டபடி சுழன்று சுழன்று அடித்தபடியிருக்க குளிர் கால்களின் நரம்புகளுக்குள்ளும் ஊடுருவுகிறது. உறைந்துகிடக்கும் பனித்திடலில் ஒரு மிருகத்தின் பாதங்கள் வளைந்து வளைந்து நீண்டபடி வந்துகொண்டேயிருக்கின்றன. ஏதோ ஒன்றிற்கான அழைப்பைப்போல நான் அவற்றை உருவகித்துக்கொள்கிறேன். இன்னமும் என் பின்வாசல் அறையை எட்டிவிடாத அந்தச் சுவடுகள், நானின்னும் வாழ்வதற்கான காலக்கடிகாரத்தின் விந்தை எண்ணிமங்களாக இருக்கவும்கூடும்.

உருவழித்து, உருவங்கள் அழித்து, சொற்களை இணைத்தும் பிளந்தும் எதைத் தேடிக் கொண்டிருக்கின்றேன். நாம் நடந்துகொண்டிருக்கும் இருண்ட பாதையின் முடிவில் சிறு ஒளி எஞ்சுமென எம்மை நாமே உந்தித்தள்ளிக் கொண்டிருப்பதை, கேலி செய்வதுபோலத்தான் காற்று ஊளையிட்டுக் கொண்டிருக்கின்றதோ? கனவுகளுக்குள் எப்போதும் சுழன்றபடியிருக்கும் ஊதாநிறச் சுவாலைகள், அதன் உச்சியில் தலைவிரித்தபடி நாக்குச் சுழன்றியபடியிருக்கும் காளியின் உக்கிர கண்களைத் தாண்டிப் போகும்போது எஞ்சுவது எதுவாக இருக்கும்?

மரம்பட்டது நன்குதெரிந்தும் அடிவேரில் நீரூறிஞ்சி பச்சையம் விரிக்குமெனும் கானல் நம்பிக்கையைப்போல, எதன் வருகையிற்காய் நான் காத்திருக்கின்றேன். கருணையின் கடைசித் துளியை எதன்பொருட்டோ அல்லது எவர் பொருட்டோ கைவிடவேண்டியிருப்பது எவ்வளவு துயரமானது என்பதை நீங்கள் அறிதல் கூடுமோ?



பனிப்பாளத்தின் தெறிப்புடன், புத்தரின் ஆழ்கடல் அமைதியுடன் நீ வந்துகொண்டிருந்தபோது, நான் எவருக்காகவோ, மீளவரக்கூடுமென கடைசிவரை பதுக்கி வைத்த பச்சையமும் கருணையின் பெருந்துளியும் விடைபெற்றுக்கொண்டு போவதைப் பார்த்தேன். எவரெவராலோ எதன் எதனாலோ முதுகில் செருகப்பட்ட வன்மத்தின் ஆணிகள் துருப்பிடித்து என்னிலிருந்து உதிர்ந்துபோகக்கண்டேன். கண்களுக்கு தென்படாத பிசாசுகளோடும் பிடரியின் பின் குசுகுசுக்கும் குரல்களோடும் போரிட்டு நான் தோற்றுக்கொண்டிருந்த எண்ணற்ற களங்கள் சூரிய ஒளியில் கரைந்து கொண்டிருந்தன.

இப்படி ஒருவரால் சிரிக்கவைக்க முடியுமாவென, இவ்வளவு ஒருவரால் நேசிக்க முடியுமாவென, இத்தனைக்கும் அப்பால் இன்னுமின்னும் பெருங்காதலின் பைத்தியக்காரத்திற்குள் நுழைய முடியுமாவென வியக்கவைத்துக் கொண்டிருக்கும் உன்னை ஒரு சொட்டு விசம்போல காயப்படுத்தும் திமிரின் கொடுக்குகள் என் வசத்தும் உரித்து. நீலம் பாரித்த கடலில் நீ நீந்திவந்து என்னை அரவணைக்கும் போதெல்லாம் இந்தத் திமிரின் கொடுக்குகள் என் உடலின் தசைகளை ஊடறுத்துச் சென்று எனக்கான மன்னிப்புக்களைக் கோரக்கூடாதோவென ஏங்கி நிற்கின்றேன்.

எல்லாவற்றையும் கைவிடவே விரும்புகின்றேன்; ஆனால், எதனையும் கைவிடாத துயரங்களுடன் தினமும் பாடுகளைச் சுமந்து கொண்டிருப்பவனாக அலைந்தபடியிருக்கின்றேன்.

இந்தப் பனிக்காலம் கடந்துபோகும் வரையாவது என் கொடுக்குகளை ஓர் ஓரத்தில் விட்டுவிட்டு அரவணைப்பின் கதகதப்பிற்குள் பதுங்கிக்கொள்ள விரும்புகிறேன். எண்ணற்ற வருடங்களின்பின் எதன்பொருட்டோ / எவர் பொருட்டோ தொலைத்துவிட்ட பேரமைதியை உன் மூச்சுக்காற்றில் நான் கண்டுகொள்கின்றேன்.

**சிறகசைப்பு - 02**

நான் எடுத்த, உனது நெற்றியில் திலகமிட்ட புகைப்படத்தைப் பார்க்கின்றேன். எவ்வாறோ எப்போதோ நிகழ்பவைதானே அதிசயங்கள் எனப்படுகின்றன. அவ்வாறு ஒரு அரிய புகைப்படம் அது. அவ்வளவு அமைதி தவழும் முகம் உனது. சடங்குகள் சம்பிரதாயங்களில் நம்பிக்கை இல்லாதபோதும் அவற்றிலிருக்கும் aesthetic எப்பவும் என்னைக் கவர்ந்தபடியிருக்கும். இவற்றை உதறித்தள்ளிய மிகச்சிக்கலான நவீன மனிதன் என என்னை நினைத்துக்கொண்டாலும் இவ்வாறான அழகியலில் மனம் அவ்வப்போது திளைத்தும்விடுகின்றது.

சிலவேளைகளில் இந்தக் கொண்டாட்டங்கள் என்பதே நமது நாளாந்த விடயங்களின் அலுப்பிலிருந்து நம்மை மீட்கத்தான் ஆதிகாலத்தில் கண்டுபிடிக்கப்பட்டவையாக இருந்திருக்கலாம். நாம்தான் பிறகு சடங்கு சம்பிரதாயங்கள் என இறுக்கி, சக



மனிதர்களைப் பிரிக்கும் இறுக்கமான விடயங்களாக மாற்றிவிட்டோம் போலும். தன் விருப்பின் நிமித்தம் ஒருவர் தன்னை அழகுபடுத்தும்போது அவருக்கு ஒரு விகசிப்பு வந்துவிடுகின்றது. அந்த ஒளி அருகில் இருப்பவர்களையும் பற்றிக்கொள்ள அஃதொரு இனிதான அனுபவமாய் ஆகிவிடுகின்றது. இப்போது நான் உன் அழகில் இலயித்து மனம் விரிந்து உணர்வுகள் கிளர்ந்து இப்படி எழுதுவதைப்போல.

நீ எவ்வளவு அழகு என இன்னமும் எவரும் உணர்த்தாத அளவிற்கு நீ பேரழகி. மிக நெருங்கி நின்று பார்த்தால் ஓவியங்கள் தம் அழகைக் காண்பிப்பதில்லை என்பதுபோல உன்னை விட்டு விலகி நிற்கும்போதே உனது வனப்பு இன்னும் விளங்குகின்றது. அதைவிட இந்த எழிலுக்குள் புதைந்துகிடக்கும் அன்பு பேரண்டமாய் விரிவதையும் கண்டிருக்கின்றேன். அன்பு எல்லோருக்குள்ளும் நிறைய இருந்தாலும் அரிதாகவே சிலரால் மட்டுமே அதை வெளிப்படுத்த முடிகின்றது. நீ அவ்வாறான ஒருத்தி. இந்த அன்பு சிலவேளைகளில் மூச்சுத்திணற வைத்தாலும் அதன் கதகதப்பில் நான் இதுவரை நுழைந்துவிடா உலகைக் காண்பதையும் மறைத்துவிடமுடியாது.

கருஞ்சாம்பல் வானத்தைப் பார்த்தபடி உன்னோடு பயணித்துக் கொண்டிருக்கின்றேன். இலையுதிர் காலத்திற்குரிய melancholy உணர்வுகள் உள்ளத்தில் உருகி வழிகின்றன. வழமையாய் வரும் இந்தப் பருவத்திற்குரிய மன அழுத்தமாய் அது இல்லை. சங்ககாலத்தில் காதலன் தன்னருகில் இருக்கின்றான் என உணர்கின்ற மகிழ்ச்சியும் அதேசமயத்தில் அவன் தன்னைவிட்டு இன்னும் கொஞ்ச நேரத்தில் பிரிந்து போய்விடுவானே எனக் கவலையும் இணைந்த, பெண்ணொருத்தி கொள்ளும் உணர்ச்சிக்குவியல்தானோ இது.

மலைகள் நிரம்பிய நகரம். அதே நீர்வீழ்ச்சி. சில வருடங்களின் முன் மனம் சோர இருட்டறையிலிருந்து மீட்டெடுத்து நண்பன் கூட்டிச்சென்ற இடம். ஒரு கணமும் நின்றுவிடாது கொட்டிக்கொண்டிருந்த நீரைப்போலத்தான் என் துயரமும் இனியொருபொழுதும் நிற்காதோ என உளம் வெம்பிய இலையுதிர்காலம் அது. எப்போதும் உணர்ச்சிகள் உருண்டுபிரண்டு அடம்பிடித்தாலும் அவற்றை மாற்றி இதமாக்கும் இயற்கைகூட கைவிட்டதொரு பருவம். முகத்தில் தெறித்த சாரல்கூட ஊசிகளைப் போல குத்துவதான பாவனையில் நின்றுகொண்டிருக்கின்றேன்.

நாம் யார்? நாடகம் ஒன்றில் நமக்குத் தரப்பட்ட கதாபாத்திரமொன்றில் நடித்துக் கொண்டிருப்பவர்கள்தானா? திரை விலகும்போதும் திரை மூடியபின்னும் ஏதோதோ உணர்ச்சிகள் உருட்டப்பட்டுக் கொண்டிருக்கும் நாம் எதை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கின்றோம். புதிய புதிய நாடகங்கள். புதிய புதிய கதாபாத்திரங்கள்.

இப்போது முகத்தில்படும் சாரல் இனிதாகத் தோன்றுகின்றது. ஊசிக் கூர்மை போய், மயிலிறகின் வருடல் போலத்தான் தோன்றுகின்றது. இந்த நீர்வீழ்ச்சி இரவும் பகலுமென ஒரே மாதிரியாகத்தான் வீழ்ந்து கொண்டிருக்கின்றது. நான்தான் எனக்கிருக்கும் மனோநிலைக்கு ஏற்ப மாற்றி மாற்றி உணர்ந்து கொண்டிருக்கின்றேன் போலும். இதமோ, வலியோ இல்லாத எந்தவொரு உணர்நிலைக்கும் அப்பாற்பட்ட ஒரு எல்லைக்குப் போவதற்குத்தான் இந்தளவு பிரயத்தனப்பட்டிருக்கின்றேனோ தெரியாது.

இலைகள் மஞ்சள், செம்மஞ்சள், சிவப்பாக மாறிக்கொண்டிருக்கின்றன. இன்னும் சில நாட்களில் இலைகள் அனைத்தும் உதிரும். பிறகு பச்சையாக துளிர்க்கும். இதுதான் இயற்கையெனில் இப்படித்தான் இல்லாதவற்றை யோசித்து யோசித்துக் குழம்புவதுதான் என் இயல்பும் போலும்,

இப்போது நீ இருக்கின்றாய். அணைத்துக் கொள்கின்றேன். ●

**இளங்கோ <elanko@rogers.com>**

# தமிழ்ப்பற்றும் மொழி அரசியலும்

## 'Passions of the tongue'

### நூலுக்கு எழுதப்பட்ட முன்னுரை

சுமதி ராமசுவாமி

தமிழில்: பூ.கொ. சரவணன்

## இல்லங்களுக்கு இடையில், மொழிகளுக்கு இடையில்

மொழிப்பற்றைக் குறித்த இந்தப் புத்தகத்தை மொழிகளின் மீதான என் காதலைப் பற்றிய ஒரு வாக்குமூலத்தோடு துவங்குவது பொருத்தமாக இருக்கும். இன்னமும் நேர்மையாக, வெளிப்படையாகச் சொல்வதென்றால், எனக்கு எந்த ஒரு குறிப்பிட்ட மொழியின் மீதும் மட்டும் தனித்த பற்றில்லை.

நான் புதுத் தில்லியில் பல்வேறு மொழிகள், லயம் மிக்க ஒலிக்குறிப்புகள் இவற்றால் சூழப்பட்ட வீட்டில் வளர்ந்தேன். மொழியியல் ரீதியாக என்னுடைய வீடு பலதரப்பட்ட மொழிகளின் சங்கமமாக இருந்தது. என்னுடைய வீடு தற்கால பாணியில் சொல்வது என்றால், மொழியளவில் மட்டுமேனும் நவநாகரீகப் பண்புடையதாகத் திகழ்ந்தது. என் தாய் தமிழ் பேசுவதைக் கேட்டபடி வளர்ந்தேன். வழக்கப்படி, தந்தையும் தமிழிலேயே பேசினார். என் தந்தை கன்னட மொழியில் சரளமாகத் தன்னுடைய உடன்பிறந்தவர்களோடு உரையாடுபவராக இருந்தார். பெங்களூரில் இருந்த அவரின் நிறுவனத்தைக் கன்னட மொழியைக் கொண்டே அவர் நிர்வகித்தார். தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட பெற்றோருக்கு பிறந்து பெங்களூரில் வளர்ந்த என் தந்தை கன்னடத்திலேயேதான் கணக்குப் போடுவதாக, ஏன் கனவுகூடக் காண்பதாக வலியுறுத்தி சொல்வார்.

பெரும்பாலான பிராமணர்கள் வீட்டில் நடப்பதை போல, ஆறுவயது முதல் வீட்டில் இறைவழிபாட்டிற்காக எனக்குப் போதிக்கப்பட்ட மந்திரங்களின் மூலம் சம்ஸ்கிருத அறிமுகமும் கிட்டியது. பெரும்பாலான நடுத்தர வர்க்க குடும்பங்களில் வளர்ந்த இளம் பெண்களின் வாழ்க்கைப் பயணத்தில் நடப்பதை போல, நானும் 'இந்திய கலாசாரத்தை' காத்தபடியே, நவீனமானவளாக, மேற்கத்திய தாக்கம் கொண்டவளாக மாறவேண்டிய சுமைக்கு ஆளானேன்.

ஏழு வயது இருக்கும்பொழுது, இந்திய பாரம்பரிய இசை வகைகளில் ஒன்றான கர்நாடக சங்கீத வகுப்புகளுக்கு அனுப்பப்பட்டேன். இவ்வாறு தெலுங்கு மொழியின் ஒலிக்குறிப்புகளுக்கு அறிமுகப்படுத்தப்பட்ட நான் பொருள் புரியாமலே அப்பாடல்களைக் கற்றுக்கொண்டேன். இன்றுவரை என்னுடைய இசைத்தட்டுக்களில் தெலுங்கு பாடல்களை இழைய விட்டுக் கசிகிற கணங்கள் உண்டு.





என்னுடைய பள்ளிக்கல்வியின் மொழியாகவும் தனிப்பட்ட வாசிப்பு இன்பத்தின் மூலமாகவும் குடும்பத்தினர், நண்பர்களோடு இயல்பாக உரையாடும் மொழியாகவும் இந்திய ஆங்கிலம் திகழ்ந்தது. டெல்லியின் கடைகளில் பேரம் பேசவும், திரைப்படங்கள், பாடல்கள் ஆகியவற்றை ரசிக்கவும் இந்தி உதவியது. இந்திப் பாடல்கள், திரைப்படங்களைக் கண்டு களிப்பது முன்னைப் போல இல்லாவிட்டாலும் இன்னமும் தொடரவே செய்கிறது. இந்த இந்திப் படங்களைப் பார்த்ததும், டெல்லியின் அன்றாட வாழ்வின் அங்கமாக இருந்ததும் ஒரு பயனைத் தந்தது. இந்தி மொழி பேசுபவர்களோடு நெருங்கிய, இணக்கமான கடந்தகாலத் தொடர்புகொண்ட உருது மொழியோடு அறிமுகத்தை என்னை அறியாமலே நான் பெற்றதை பின்னரே உணர்ந்தேன்.

ஆக, நான் புழங்கிய இந்த மொழிக் குடும்பத்தில் என்னுடைய 'தாய் மொழியாக' கருதப்பட்ட தமிழின் இடம் என்ன? தமிழைப் பள்ளியில் நான் கற்கவில்லை. எனக்குத் தமிழை வாசிக்கவும் தெரியாது. தமிழைப் பொது இடத்தில் பேசவோ பிறர் பேசி கேட்கவோ இல்லை. வீட்டில் தமிழைத் தொடர்ந்து பயன்படுத்தினோம் என்றாலும், ஆங்கிலமும் இந்தியும் அவ்வப்பொழுது உள்ளே நுழைந்துகொள்ளும். தமிழ் குறித்து இன்றைக்குத் தேர்ந்த அறிவிருப்பதால் நாங்கள் வீட்டில் பேசிய தமிழ்மொழி பெருமளவுக்குச் சம்ஸ்கிருதமயமானதாக இருந்தது எனச் சொல்ல முடியும்.

ஒற்றை மொழி ஆதிக்கம் செலுத்திய சுற்றுப்புறங்களில் பன்மொழி புலமைகொண்ட வினோத ஜந்துவாக நான் வளர்ந்ததாக உங்களுக்குத் தோன்றலாம். எனினும், இந்தியாவின் நகரப்புறங்களில் வாழும் பெரும்பாலான நடுத்தர வர்க்கத்தினர் இதுபோன்றே பல மொழிகளைத் தங்கள் வாழ்வில் பயன்படுத்துவதை உணர்வார்கள். பயன்படுத்துகிற மொழிகள் நபருக்கு, நபர் வேறுபடும் என்றாலும் பலமொழிகளை எதிர்கொள்ளும் அனுபவம் எல்லாருக்கும் உரியது என அழுத்திச் சொல்வேன்.

என்னுடைய பன்மொழித் திறன்கள் இந்திய துணைக்கண்டத்தில் பன்மொழிகளின் ஆழமான வரலாற்றின் பிரதிபலிப்பு எனலாம். இந்த வரலாறு இடம்பெயர்ந்து, வெவ்வேறு ஊர்களில் குடிபெயர்ந்த குடும்பங்கள் தங்களுடைய குடும்பத்திற்குள், வீட்டுக்குள் மட்டும் தங்களுடைய மொழியைப் பயன்படுத்துவதன் வெளிப்பாடாகும். தாறுமாறாக அமல்படுத்தப்பட்டாலும் தேசிய கல்விக்கொள்கை ஒவ்வொரு இந்திய குடிமகனையும் குறைந்தபட்சம் மூன்று மொழிகளை (தாய்மொழி / வட்டார மொழி, இந்தி, ஆங்கிலம்) கற்கவேண்டும் என எதிர்பார்ப்பதன் விளைவுமே எனக்குக் கிடைத்த இத்தனை மொழி அறிமுகம். எனினும், என்னுடைய வாழ்க்கையின் அனுபவங்கள் துல்லியமாகக்



காட்டுவதைப் போல மொழிக்கொள்கை மூன்று மொழிகளை வளர்க்கும் என்கிற அரசின் நம்பிக்கைக்கு மாறாக வெவ்வேறு சிக்கல்களில் மாட்டிக்கொண்டது.

## அடுக்கிக்கொண்டே போகும் அந்தச் சிக்கல்களில் சில

எப்படித் தாய் மொழியை வரையறுப்பது? ஆங்கிலமும் இந்தியும் மரியாதை, வருமானம், அதிகாரம் ஆகியவற்றின் மொழிகளாகத் திகழும் சூழலில் எப்படித் தாய் மொழியை வளர்ப்பது? ஆங்கிலத்தைக் காலனிய மேற்கின் நீட்சியாகப் பார்க்கும் தேசியவாத சக்திகளை மீறி எப்படி வளர்த்து எடுப்பது? இந்தியாவின் அதிகாரப்பூர்வ அலுவல் மொழியாக அறிவிக்கப்பட்ட இந்தி, ஒரு பகுதியின் மொழியை ஒட்டுமொத்த இந்தியாவின் மீது திணிக்கும் உள்நோக்கம் கொண்டது என்று எழுந்த எதிர்ப்புகளை எப்படித் தணிப்பது? இந்த மொழிப்போர்கள் என்னுடைய தனிப்பட்ட வாழ்க்கை வரலாற்றிலும் முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளன என்பது நவீன இந்தியாவின் மொழிகளின் கலாசார அரசியல் குறித்த என் ஆர்வத்தைக் கூட்டின.

என்னைப்போன்ற வர்க்கம், ஜாதி, கல்விப் பின்புலத்தில் இருந்து எழும் இந்தியர்கள் பல மொழிகளில் தேர்ச்சி கொண்டவர்களாக இருப்பதில் எந்த ஆச்சரியமும் இல்லை. என்னுடைய அதிகாரப் பூர்வ தாய்மொழியாகத் திகழ்ந்தாலும் தமிழானது நான் இயங்கிய மொழிப் பொருளாதாரத்தின் ஓரத்திலேயே இருந்தது. தமிழ் குறித்து ஆய்வு செய்ய என்னுடைய அறிவுசார் தேடல் திரும்பியதே ஆச்சரியம் தருகிற திருப்பமாகும். இந்தியும் ஆங்கிலமும் பேசும் என்னுடைய பள்ளியிலிருந்து நான் வீட்டிற்கு ஐந்தாவது படிக்கும் பொழுது வந்து சேர்ந்தேன். அப்பொழுது, “நாம்பலாம் தமிழா?” என என் அன்னையிடம் மழலைத் தமிழில் நான் கேட்ட தருணத்தில் தான் என்னுடைய வருங்கால அறிவுலகின் வளர்ச்சிக்கான விதைகள் ஊன்றப்பட்டதாக என்னுடைய அன்னை ஆணித்தரமாகப் பெருமிதத்தோடு குறிப்பிடுகிறார்.

என் நினைவோ வேறொன்றைச் சுட்டுகிறது. மெட்ராஸில் இருந்த என்னுடைய பாட்டி ஒட்டுமொத்த கூட்டுக் குடும்பத்துக்கும் எழுதிய கடிதத்தைப் புரிந்துகொள்ளும் பதின்பருவத்து வேட்கையில் என்னுடைய தமிழ் சார்ந்த தேடல் துவங்கியது. ஆங்கிலம், தமிழ் கலந்து எழுதப்பட்ட அந்தக் கடிதம் எனக்குப் புரிபடாத புதிராகவே இருந்தது. கடிதத்தின்

துவக்கத்தில் ஆங்கிலத்தில் சம்பிரதாயமான உடல்நலம் சார்ந்த விசாரிப்புகளுக்குப் பின்னர்த் தமிழ் மொழிக்கு மாறிவிடும். சுவாரசியம் மிகுந்த, குடும்ப ரகசியங்கள், மகிழ்ச்சிகள் என்று அமைந்த குடும்ப வாழ்க்கையின் முக்கியமான தகவல்கள் தமிழில் அமைந்திருக்கும். இது என்னுடைய மொழியறிவுக்கு அப்பாற்பட்ட ஒன்றாக இருந்தது. கவர்ச்சி மிகுந்த குடும்ப அரசியலின் கூறுகளை நான் புரிந்துகொள்ள முடியாதவாறு சாதுரியமாகத் தடுத்த மொழி அரசியலை தாண்டுவது எனக் கங்கணம் கட்டிக்கொண்டேன். பதினைந்து வயதில் தமிழை எழுதக் கற்றுக்கொண்டேன். மெதுவாக, ஆனால், உறுதியாக நான் தமிழில் வாசிக்கப் பழகிக்கொண்டேன். என்னுடைய உடன்பிறந்தவர்களுக்கு ஆர்வமூட்டும் அந்தக் கடிதங்களைப் படித்துக் காட்டும் பணியை நானே செய்தேன். இன்றுவரை அவர்களுக்குத் தமிழைப் படிக்கத் தெரியாது.

நான் இப்பொழுது கோட்பாட்டு ரீதியாக விளக்கக்கூடிய மொழி அரசியலின் நேரடி அனுபவத்தை அப்பொழுதுதான் பெற்றேன். பல்வேறு மொழிகள் குடும்பத்திலோ நாட்டிலோ பெருகுகையில், மொழி மூலங்களைப் பயன்படுத்தித் தங்களுக்கு நெருக்கமான அரசியலை, தங்களுக்கு மட்டும் புரியும் மொழியில் மேற்கொள்வதன் மூலம் பரிச்சயம் இல்லாத மற்ற மொழிக்காரர்களை அந்நியப்படுத்தும் அரசியலின் அறிமுகம் வீட்டிலேயே கிட்டியது.

என்னுடைய இளங்கலை படிப்பை டெல்லி பல்கலையிலும், மேற்படிப்பை ஜவகர்லால் நேரு பல்கலையிலும் படிக்கையில் என் அறிவுசார் ஆர்வம் தமிழ் பேசும் இந்தியாவின் வரலாறுகள், பண்பாடுகள் மீது அதிகரித்தது. இந்தியாவின் தலைசிறந்த இரு பல்கலையிலும், மிகச் சிறந்த சில வரலாற்றாசிரியர்களுடன் வரலாற்றைக் கற்றேன். அது இன்றுவரை எனக்குப் பெருமளவில் உதவுகிறது. இந்தியத் தலைநகரில் இந்தியாவின் புவியியல், அரசியல் யதார்த்தத்தின் பிரதிபலிப்பு போலத் தென்னிந்தியா சார்ந்த வரலாற்றுத் துறை ஆர்வம் பெருமளவில் இல்லாமல் இருந்தது என்னைச் சஞ்சலப்படுத்தியது. தமிழகத்தில் வலிமைமிகுந்த பிராமண எதிர்ப்பு இயக்கத்துக்குப் பின்னால், பிறப்பால் பிராமணப் பெண்ணான என்னுடய தமிழ் சார்ந்த ஆர்வத்தை எனது தாய்வீடாக நான் கருதிய தமிழ்நாடு வரவேற்கும் என்கிற நம்பிக்கை எனக்கில்லை. இந்தக் காரணிகள் எல்லாம் சேர்ந்து என்னைப் பெனிசிலுவேனியா பல்கலையின் மானுடவியல் துறைக்கும், பின்னர்ப் பெர்க்லியில் உள்ள கலிபோர்னிய பல்கலையின் வரலாற்றுத் துறைக்கும் கொண்டு சென்றது. நான் தட்டுத்தடுமாறிய என் ‘தாய்மொழி’யை என் வீடு, தாய் ஆகியோரை விட்டு வெகுதூரம் தள்ளியிருந்த நாட்டில் முறையாகக் கற்றுக்கொண்டேன் என்பது தமிழுடனான என்னுடைய நம்பிக்கையற்ற காதலின் வரலாற்றுக்குப் பொருத்தமான முடிவாகும்.

நான் ஒரு மொழியைப் பேசி அதைச் சுற்றிக் கட்டமைக்கப்பட்ட ஒற்றை அடையாளத்தோடு வளரவில்லை. பலதரப்பட்ட, சமயங்களில் முழுமையற்ற வெவ்வேறு சூழல்களில் நான் பயன்படுத்திக்கொள்ளும் வசதியான (சுமையான?) அடையாளங்களோடு வளர்ந்தேன். ஒருபுறம், இதனால் பல மொழிகளுக்கும்




பல வீடுகளுக்கும் இடையே மாட்டிக்கொண்டதாக அடிக்கடி மோசமாக உணர்ந்தேன். இதற்கு நேர்மாறாக, பல மொழிகள், பல இடங்கள், பல மனிதர்களிடையே இருத்தல் ஆகியவற்றின் ஆனந்தங்கள், சாத்தியங்கள், முரண்பாடுகள் ஆகியவற்றையும் சிறப்பாக அனுபவித்தேன். இந்த வாழ்க்கை எனக்குப் பெண்ணியத் தத்துவவியல் அறிஞர் ரோசி ப்ராய்டோட்டியின் கருத்தாக்கத்தை நினைவுபடுத்துகிறது.

இத்தாலியில் பிறந்து, ஆஸ்திரேலியாவில் வளர்ந்த அவர், பிரெஞ்சு மொழியில் கல்வி கற்றார். இப்படிப்பட்ட பல்வேறு அடையாளங்கள் தாங்கிய வாழ்க்கையை அவர், ‘நாடோடி உணர்வு நிலை’ என்கிறார். இது என்னுடைய அடையாளங்களுக்கு இடையேயான வாழ்க்கையை எதிரொலிப்பது போல உள்ளது. 1994இல் ‘Nomadic Subjects’ எனும் தனிக்கட்டுரையில் இப்படிப்பட்ட உணர்வுநிலை, ‘மையம், அது சார்ந்த குறிப்பிட்ட இடங்கள், குறிப்பிட்ட வகையான அதிகாரப்பூர்வ அடையாளங்கள் எனும் கருதுகோள்களை முழுமையாக மூழ்கடிக்கிற ஒன்றாக உள்ளது’ எனக் கருதுகிறார். மேலும், இந்த உணர்வுநிலை சமூகம் வரையறுத்து இருக்கும் சிந்தனை, செயல்பாடுகளோடு பொருந்திப்போவதை தன்னளவில் எதிர்க்கிறது. மேலும், ஒருவரை அடையாளப்படுத்தும் பெரும்பான்மை வழிமுறைகளின் ஆதிக்கத்தில் கரைந்துவிடாமல் தன்னை இந்த உணர்வுநிலை காத்துக் கொள்கிறது என்கிறார்.

**கலாசார அடிப்படைகள், நம்பிக்கைகள் சார்ந்த கட்டமைப்புகள், அதிகாரம் மறுக்கப்பட்ட மக்கள் உலகின் பல்வேறு பகுதிகளில் மீண்டும் வலிமை பெறும் முக்கியமான வழிமுறைகளாக உள்ளன. பின்னோக்கி சொல்வதைச் சாராமாகக் கொண்ட இந்தக் கலாசார நம்பிக்கைகளுக்கு யார் அங்கீகாரம் தருவது என என்னுடைய நாடோடி உணர்வுநிலை கேள்வி கேட்கிறது.**

*நாடு கடத்தப்பட்ட, இடம்பெயர்ந்த மக்களின் உணர்வுநிலையில் காணப்படும் பிரிவு, இழப்பு, தாய்வீடு திரும்புதல் முதலிய உணர்வு நிலைகளுக்கு மாறாக, ஒரு நாடோடி தன்னுடைய உலகத்தோடு கொண்டிருக்கும் உறவானது, ரோசி ப்ராய்டோட்டியின் பார்வையில் 'தோன்றி மறையும் பிணைப்பு' மற்றும் 'சுழற்சியில் அடிக்கடி தோன்றும்' உறவாகும். இந்த நாடோடி பாணியானது, கடந்த காலத்தின் நிலை, பெருமிதம், ஒற்றைத்தன்மை ஆகியவற்றில் மனதை பறிகொடுத்து நிலைத்து நிற்பதில்லை. இந்த நாடோடித்தன்மை பன்மொழிப்புலமையோடு கைகோர்த்துப் பயணிக்கிறது. நிலையான அடையாளங்கள், தாய் மொழிகள் குறித்து ஆரோக்கியமான சந்தேகம் கொள்கிறது. நாடோடியான பன்மொழிப்புலமையாளர் பல்வேறு மொழி அடிப்படைகளிடம் மென்மையான நெருக்கம் கொண்டிருப்பதால் எந்த வகையான மொழி அல்லது இனத் தூய்மையை நாடுவதில்லையோ? என ரோசி ப்ராய்டோட்டி வினா எழுப்புகிறார்.* (Braidotti 1994: 8, 28).

இந்த ஆயிரம் ஆண்டுகளின் கேள்விகேட்கும் சிந்தனையின் முன்னுதாரணமான வடிவமாக நாடோடித்தன்மையைக் கருதும் ப்ராய்டோட்டியின் எல்லாக் கருத்துக்களோடும் நான் ஒப்ப வேண்டியதில்லை. அவருடைய ஆர்வமூட்டும் பரிந்துரைகளின் தத்துவத் தாக்கங்கள் குறித்து நுண்ணாய்வு செய்யப்போவதில்லை. பின்காலனிய காலத்தில் பல்வேறு மொழிகள், வீடுகளுக்கு இடையே வாழும் நாடுகளைக் கடந்த நாடோடி மக்களின் வாழ்க்கை முடக்கிப்போடும் பயனற்றவைகளின் தொகுப்பாக அல்லாமல், பல முக்கியமான வாய்ப்புகளை வழங்கும் ஒன்றாகக் காண முடியும் என எனக்கு எச்சரித்த படைப்பாகவே காண்கிறேன். புதுப்பித்துக்கொள்ளும், மோசமாகிக்கொண்டே இருக்கும் தேசியம், பிரிவினைவாதம், இடப்பற்று சார்ந்த உணர்வுநிலைகள் மிகுந்த இந்த வரலாற்றின் குறிப்பிட்ட தருணத்தில் அவற்றைக் கவனத்தோடு அணுக இந்த நாடோடி உணர்வுநிலை உதவுகிறது. இதனால் ப்ராய்டோட்டி சொல்வதைப்போல *'ஏற்படுத்தப்பட்ட பகுப்புகளிடையேயும், அனுபவத் தளங்களின் ஊடாகவும் சிந்திக்கவும் பயணிக்கவும் முடிகிற, எல்லைகளை மழுப்பி, பாலங்களை எரிக்காமல் செயல்படவும் முடிகிறது' (1994: 4, 12).*

*கலாசார அடிப்படைகள், நம்பிக்கைகள் சார்ந்த கட்டமைப்புகள், அதிகாரம் மறுக்கப்பட்ட மக்கள் உலகின் பல்வேறு பகுதிகளில் மீண்டும் வலிமை பெறும் முக்கியமான வழிமுறைகளாக உள்ளன. பின்னோக்கி சொல்வதைச் சாராமாகக் கொண்ட இந்தக் கலாசார நம்பிக்கைகளுக்கு யார் அங்கீகாரம் தருவது என என்னுடைய நாடோடி உணர்வுநிலை கேள்வி கேட்கிறது. எந்தச் சூழல்களில் இது நிகழும்? மிக முக்கியமாக, ஏன், எப்படிக் கலாசாரச் சொத்துக்களான மொழி, மதம் அல்லது எல்லாவற்றை விடவும் புனிதமான உடமையாகக் கருதப்படும் தேசம் ஆகியவை மிகப்பெரும் உருவம் கொண்டதாக, அழியாத்தன்மை கொண்டதாகக் கருதப்படுகின்றன? இதன்மூலம் எப்படி இவை ஆட்கொள்பவர்களை ஆட்கொள்கின்றன?*

இந்தப் புத்தகமும், என்னுடைய வாழ்க்கையைப் போல நாடோடித் தன்மையைத் தன்னகத்தே கொண்டுள்ளது. என்னுடைய முனைவர் பட்ட ஆய்வின் ஒரு பகுதி இந்த நூல் உருவாக்கத்தில் பயன்பட்டுள்ளது. முனைவர் பட்ட ஆய்வை இந்தியா, இங்கிலாந்து, அமெரிக்கா நாடுகளில் கண்டங்கள், கலாசாரங்களைக் கடந்து செய்தேன். புத்தகத்தின் சில பகுதிகள் மெட்ராசில் எழுதப்பட்டது, பிற பகுதிகள் அமெரிக்காவில் இருந்தாலும் மிகவும் வேறுபட்ட கலசார, அறிவார்ந்த இடங்களான பெர்க்லே, சிகாகோ, பிலடெல்பியா ஆகியவற்றில் எழுந்தன. என்னுடைய வாழ்வின் இந்திய பக்கங்கள் அமெரிக்க ஆய்வுப் புலத்தில் அரிதாகி வரும் என்னுடைய இருப்பில் ஒரு வேகத்தையும் வேட்கையையும் செலுத்துகின்றன. அதேசமயம், நான் பணியாற்றும் இடத்தில் நான் பெற்று இருக்கும் நிலையே பகுத்தாயும், மையமற்ற வாய்ப்புகளை உள்ளடக்கிய நாடோடி வாழ்க்கையை வசதியாகத் தொடர உதவுகிறது. வரலாற்றை எழுதுதல் என்பது சமீப வருடங்களில் நாட்டைப் பற்றி எழுதுவதோடு சிக்கலான செயல்பாடாகப் பிணைந்துள்ளது என்று பலமுறை சொல்லப்பட்டு விட்டது.

அதிகாரப்பூர்வ வரலாறுகள் பெரும்பாலும் நாடு என்கிற வெளிக்குள் இருந்தே எழுதப்பட்டுள்ளன. எனினும், இந்த வரலாற்று நூல், நாடுகளைக் கடந்து, மொழிகளை, இருப்பிடங்களைக் கடந்து பயணிக்கிறது. இதன் இறுதி உருவாக்கம் அது பேசும் மக்கள், அந்த மக்களைக் குடிகளாகக் கொண்ட நாடு ஆகியவற்றை விட்டு வெகுதூரம் தள்ளிய ஒரு இடத்திலேயே நிகழ்ந்துள்ளது. இப்படிப்பட்ட படைப்பின் உள்ளடக்கத்தால் ஏற்படக்கூடிய வரவேற்பு, வாசிப்பு சார்ந்த சிக்கலான விளைவுகளை நான் அறிந்திருந்திருக்கிறேன். எனினும், சல்மான் ருஷ்டியுடன் இணைந்து 'பகுத்தாய்வு சிந்தனையின் நோக்கம் புதிய கோணங்களில் வரலாற்று உண்மைகளைத் திறந்து விடுவதும், கட்டமைக்கப்பட்ட நம்பிக்கைகளை நிலைகுலைப்பது' என்றே சிந்திக்க விரும்புகிறேன். என்னுடைய நாட்டைவிட்டு நிகழ்ந்த நகர்வு, பகுத்தாயும் நாடோடி வாழ்க்கை எனக்கு உறுதியான வாய்ப்பை தருகிறது. இல்லையேல், ரூஷ்டி எள்ளல் ததும்பச் சொல்வதைப் போல, இப்படி எண்ணிக்கொள்வதுதான் என்னுடைய பணியைச் செவ்வனே செய்ய உதவும். ●

# காலத்தின் ஆவர்த்தனம்

**தோப்பில் முஹம்மது மீரான்**
**ஓவியம்: சரோஜித் மஜூம்தார்**

வீட்டிற்குள் ஒரு வாரமாக மவுனம் உறைந்து கொண்டிருந்தது. யார் முகத்திலும் களிப்பு இல்லை. நஜீபுக்கு இறுதி ஆண்டு பரீட்சைக்கு பணம் கட்டுவது எப்படி என்று கேள்வி தொங்கிய முகங்கள். 725 ரூபாய் கட்ட வேண்டுமென்று நஜீப் கல்லூரி விட்டு வந்து சொன்ன மாலையிலே மனம் இடிந்து உள்ளே விழுந்தது.

எப்படி திரட்டுவேன் இந்த பெரும் துகையை?

பணம் திரட்டும் முயற்சியில் தோல்வி கண்டு, ஒரு வாரமாக இரவுத் தூக்கமில்லே. காலையில் இறங்கிப் போய் எங்கெல்லாமோ பணம் கேட்டு அலைந்துவிட்டு வந்து உட்கார்ந்ததுதானுண்டு. வந்தேறிய கால் களாறக்கூட அவகாசம் கிடைக்கவில்லை. மனைவியின் பஞ்சரிப்பு. பஞ்சரிப்பு தாங்காமல் வீட்டிலிருந்து இறங்கி எப்போதும் சென்று கொண்டிருந்தேன். தலைக்குள் இழந்தவற்றைப் பற்றியத் துயரச் சிந்தனைகள் எப்போதும் போல.

மனைவியின் தொல்லை தாங்கி சற்று உட்கார முடியவில்லையே என்ற கவலை வேறு. நச்சரித்துக் கொண்டேயிருந்தாள். மீன் வாங்கிவர, மீன் பட்டுச் சொரியுதாம். ரொம்பவும் மலிவாம். மீன் தொட்டு கூட்டி ரொம்ப நாளாச்சாம். ரூபாய்க்கு இருபது சாளை மீனாம்!

இளம் உச்சி நேரம். வழக்கம் போல் எடுத்துக்கொள்ளும் குடையை எடுக்கவில்லை. வேண்டுமென்றே எடுக்காதது அல்ல. நச்சரிப்புத் தாங்காமல் பலதும் மறந்த கூட்டத்தில் குடையும் மறந்துவிட்டது. தப்பினால் போதுமென்று இறங்கிச் செல்லல்.

கடற்கரைக்குச் செல்லும் முடுக்கு திரும்புகையில் பொதுபொதுவென்று வாசனை அங்கு பொங்கியது. நின்று முகராமல் நகர மனம் விடவில்லை. எங்கு திரும்பினாலும் வெளிநாட்டு நறுமணத்தால் மூச்சு திணறிப் போகும் போலிருக்கிறது. இந்த மூச்சுத்திணறல் இப்பம் கொஞ்ச காலமாகத்தான், ஊரில் வேலை வாய்ப்பில்லாதவர்கள் கடல் கடந்தபிறகு. மனைவிக்கும் பிள்ளைகளுக்கும் ஒரு வெளிநாட்டு சோப்பாவது, செண்டாவது யாராவது தரமாட்டார்களா என்ற ஏக்கத்திற்குப் பின், விலை கொடுத்து வாங்க முடியாத வறுமைச் சிந்தனை அவர்களுக்கு இல்லாமலில்லை.



''ஒரு போசியா சோப்பு தேச்சு குளிக்க ஆசையா இரிக்கி.''

மனைவி வேண்டும்போதெல்லாம் மவுனம் பதில்.

நச்சரிப்பில் மவுனம் உடைந்து உதிரும் சொற்கள் அவளை ஆறுதல் படுத்துவதற்கு போதுமானதல்ல.

''பொறு நம்மொ சொந்தக்கார புள்ளைய ஊருக்கு வந்தா தருவாங்கொ.''

''உங்கெ மருமோனுக்கு ஒரு காயிதம் போடுங்கோ. ஆறு கட்டி சோப்புக்கும் கால் டஜன் ஸ்ப்ரேக்கும்.''

''வேறே?''

''எனக்கு ஒரு ஹேர் டையும்.''

''ஆருக்கும் எதுவும் கேட்டு கடிதம் எழுதும் பழக்கம் எனக்கு இல்லை; பொறு மருமொவன் வந்தா தருவான்.''

என்னிடம் இருக்கும் எதையோ கேட்டு, நான் கொடுக்காதது போல முகத்தை வெட்டித் திருப்பிவிட்டாள். எதற்கும் மசியமாட்டேன் என்று புரிந்து இப்போது கடிதம் எழுதச் சொல்லிப் பின்னி எடுக்காதது எனக்கு ஆறுதலாகவேயிருந்தது.

எவளாவது கண் சிமிட்ட வைக்கும் சேலை அணிந்து கொண்டாலோ, அவளுடைய ஆடையிலிருந்து வாசனை புறப்படுவதை முகர்ந்தாலோ, உதட்டுச் சாயத்தையோ, அய்ஷாடோவையோ கண்டாலோ, அந்தக் கணம் அவளுடைய தொண்டை கரகரக்கும்.

''எனக்கு ஒரு கூடப்பிறப்பு வெளிநாட்டிலெ இருந்தா...''

அவளுக்கு ஒரு உடன்பிறப்பு இல்லாத குறையை ஒவ்வொரு அசைவிலும் சொல்லிக்கேட்டு, கேட்டுக் காதே செவிடாகிவிட்டது.

இதையெல்லாம் செவியுறவும் செவியுறும் போதெல்லாம் மனசில் வியாபிக்கும் வேதனைகளை தாங்கி ஓர் ஊமைப் பிறவியாக நடக்கவும் என்னை ஆட்கொள்ளச் செய்த பொருளாதார தகர்ச்சையை மறக்க முயன்றாலும் முடிவதில்லை. இந்த முடியாமை, வறுமையில் வாடுவோருக்கு ஓர் அதிகப்படியான தண்டனையல்லவா என்று தோன்றுவதுண்டு.

சென்று கொண்டிருந்த முடுக்கை ஒட்டிய வீடு, உறவினருடையது. அந்த வீட்டுக்காரர் குவைத்திலோ பஹ்ரைனிலோ? அந்த வீட்டுக்க பின்புறம் கிணறு. கிணற்று நீர் ஓடிச் செல்ல இடம் இல்லை. வீட்டு மதில் சுவரின் அடியில் கல் சூழன்று போன துளைவழியாக குளிக்கும் தண்ணீர் முடுக்கில் மலைப்பாம்பு போல் ஓடிக் கொண்டிருந்தது. அந்தத் தண்ணீரிலும் வாசமிருந்தது. அதை மிதித்துத்தான் நடக்க வேண்டும்.

தண்ணிரில் மிதிக்காமல் எப்படி போவது என்று யோசனையில் நிற்கும் போது, மதில் சுவரைத் தாண்டி தோளில் வந்து விழுந்தது, வெளிநாட்டு கெமி சோப்பின் பளபளப்பான மேலுறை ஒன்று. தண்ணீரில் விழவில்லை. எடுத்த உறையை ஆசை தாளாமல் முகரத் தோன்றியது.

மனைவி, மக்கள் ஆசைப்பட்டதில் அர்த்தமில்லாமலில்லை. ஆசைகளையே

நினைக்கக்கூட மறுக்கப்பட்டவன் என்ற உள்ளுணர்வுடன் நாளைய வயிற்றுக்கு வழி தேடும் தன்னையே இந்த வாசம் ஈர்க்குமென்றால்!

அந்தரங்க அறை இருட்டிலிருந்து ஒரு ஈர விரல் சுட்டித் தூண்டியதால் அந்த உறையை பெருங்காயப் பைக்குள் போட்டுக் கொண்டதும் அங்கு நிற்கவில்லை. மலைப்பாம்பின் மீது மிதித்து விடாமலிருக்க கால்விரல் ஊன்றி எப்படியோ நடந்து ஒரு வழியாக முடுக்கைக் கடக்க முடிந்தது. கடற்கரைக்கு செல்லும் வழியில் வைத்து உறையை மடியில் கட்டியதை நினைக்கும்போது, அது ஒரு தரக்குறைவான செயலாகியிருந்ததென்று இப்போது தோன்றுகிறது.

மனைவியின் கணிப்பு தவறவில்லை. எக்கச்சக்கமான மீன்கள் பட்டுச் சொரிந்தன. விசாரித்தவர்களிடமிருந்தெல்லாம் வந்த ஒரே பதில் - மலிவுதான், ரூவாக்கு இருவது சாளை.

இந்த மலிவு நேரத்திலாவது மீன் கூட்டி உண்பதற்கு நாக்கு குறுகுறுத்தது.

சுளகில் கூட்டி வைத்திருந்த மீன்களைப் பார்த்து விலை கேட்டேன்.

விலை சொல்லுமுன் மீன்காரி என்னை ஏறிட்டுப் பார்த்தாள். அவளுடைய மூக்குத் துவாரம் அகலப்படுவதைக் கவனித்தேன்.

விலை சொன்னாள்: "ஒரு ரூவாவுக்கு ஒரு சாளை."

நடுங்கிவிட்டேன்.

மலிஞ்சு மண்ணேறிக் கிடப்பதாக எல்லோரும் சொன்னார்கள். இவளேன் இந்த கொள்ளை விலை சொல்கிறாள்?

''ஏன் ரோசிக்கீரம். பஞ்சம் குத்தாரெ வாங்கிட்டுப் போய் பொரிச்சு தின்னுமே..''

அவளுடைய மூக்குத் துவாரங்கள் அகலப்பட்டதின் பொருள் என்னவென்று யோசித்து நிற்கையில் அவள் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டாள்.

''இப்போ பேச்சியாக்காரங்கொ மீனுக்கு வெல கேக்காட்டாங்கொ.'' மடியிலிருந்து மணம் பரப்பிய உறை, என்னை அவள் கண்களுக்கு உயர்வாகக் காட்டியது. அவள் முன் நான் எனக்குள் குறுகி நின்றேன். அவள் சொல்லும் தீ விலை கொடுத்து வாங்கும் சக்தியல்லாத தவிப்பு எனக்கு. என்றும் போல் இன்றும் ரசமும் துவையலும்தான். திரும்பி நடக்காமல் வேறு வழியில்லை. நேற்று வரை பார்த்தாலும் பாராமல் நடந்தவர்களெல்லாம், ஆசை குன்றிப் போய் திரும்பிப் சென்று கொண்டிருந்த என்னை கடந்து சென்ற கணம் அவர்களாகவே கைத்தட்டிக் கூப்பிட்டு, மகன் போசியாவிலா என்று நலம் விசாரித்தனர். அதன் அகப் பொருள் முதலில் எனக்குப் பிடிபட வில்லை. எதோ ஒரு புரியாமை எனக்குச் சுற்றும் வலை பின்னி சிக்க வைத்தது. வெறும் பையும் வீசிய கையுமாக படி ஏறிய போது மனைவி சேலை முனையை இடுப்பில் சொருவினாள். அது படைவாளை உருவி எடுப்பதாகும். அவளுடைய அடிப் பாவாடை விளிம்பு அவள் கால் மூட்டை தொட்டிருந்தது.

''என்ன வெறும் கையோடெ வாறியோ?'' கேள்வியே அதட்டலாகவும் எட்டி மிதிப்பதாகவும் இருந்தது. சீறி வந்த அவளுடைய முகத்திலிருந்து சீற்றம் விலகியதும் உடன் அவள் புன்னகைத்ததும் ஒரு நொடி இடையில் அவளிடத்தில் கண்ட இந்த அற்புத மாற்றம் புதிராகவே இருந்தது முதலில்.

''கொண்டாருங்கோ.'' கை நீட்டினாள்.

''மீன் வாண்டல்ல. கொள்ள வெல.''

''பரவாயில்லெ. பேர்சியா சோப்பை கொண்டாருங்கொ.''

''சோப்பா?''

மடியிலிருந்த உறை நினைவுக்கு வந்தது. என்ன சொல்வதென்று தெரியாத குழப்பமாக வேயிருந்தது. வெற்று உறையை எடுத்தபோது அவள் முகத்தில் கரடி ஓடித் திரிந்தது.

வெறித்துப் பார்த்தாள் என்னை.

அந்தப் பார்வை அனலில் தோல் கொப்புளங்களை உண்டாக்கின.

பெண் முகத்திற்கு இவ்வளவு கவர்ச்சி அழகையும் இவ்வளவு நடுங்கச் செய்யும் சீற்றத்தையும் கொடுத்த படைப்பாளியின் படைப்புத் திறனைப் பாராட்டமாலிருக்க முடியவில்லை.

''இண்ணைய்க்கும் வெறும் சோறு தின்னு வாங்கொ.''

சொருகியிருந்த சேலை முனையை எடுத்துவிட்டுக் கொண்டு போன போக்கு! உலகையே வெறுத்துவிட்டுப் போவதாக வேயிருந்தது. ஏதேனும் கிணற்றிலோ ஆற்றிலோ குதிக்கப் போவதாயிருந்தது. இப்படியான எதிர்வினைகளையெல்லாம் கண்டபோதும் உறையை வெளியே வீச மனம் ஒப்பவில்லை. கூட்டிலுள்ள நெளிவு சுளிவுகளை எடுத்து சோப்பு வடிவத்தில் கூட்டை சரிசெய்து காட்சிப் பொருள்கள் இல்லாத, கண்ணாடி உடைந்து போன ஷோக்கேசில் பத்திரப்படுத்தினேன். வெளிநாட்டு சோப்பின் உடலில் ஒட்டியிருந்த உறையையாவது முகர்ந்து கொண்டிருக்கலாம் என்ற சின்ன ஆசை.

சகோதரி பையன் பஹ்ரைனுக்கு செல்ல யாத்திரை கேட்க வருகையில் நிறைய விதவிதமான நாற்காலிகளும் கண்ணாடி டீப்பாய்களும் அலங்காரமாய்க் கிடந்தன. முந்தைய பெரிய வீட்டு முகப்பில். இப்போது இந்த சின்னஞ்சிறிய வாடகை வீட்டில் பழைய ஒரு நார் கட்டில் மட்டும் வருவோருக்கு உட்கார. அதில் உட்காரும் போதெல்லாம் இழந்துவிட்ட செழுமைகளையும் அவை வீட்டை விட்டு வெளியேறிய சால்களையும் தற்போதைய வறுமையில் ஒரு நாளை நகர்த்திவிடுவதையும், நஜீபை படிக்க வைக்கப்படும் சிரமங்களையும் பற்றிய நினைப்பு பகலை இரவிலும், இரவை பகலிலும் கொண்டு விடுகிறது. நார் கட்டிலில் முட்டுகட்டி உட்கார்ந்து கொண்டிருந்த போது, ஜன்னல் கம்பி வழியாக வீட்டின் முன்பக்கமுள்ள தென்னம் தோப்பு பார்வையில் பட்டது. தன்னிடமிருந்து அன்னியப்பட்டுப் போன அந்த தென்னம் தோப்பில் குலைத்து நிற்கும் தெங்கின் மண்டையில் பார்வை

ஊன்றிக் கொண்டிருக்கும் போது நஜீப் முன்வந்து நின்றான்.

''நாளை கடைசி நாள். பணம் கட்டலேண்ணா பரீட்சை எழுத முடியாது.''

நஜிபுடைய பார்வையில் எதிர்பார்ப்பும் ஏமாற்றமும் முயங்கியிருந்தன.

தென்னம் மண்டையிலிருந்து பார்வையை பிடுங்கித் திரும்பியதும், என் ஏமாந்த பார்வை அவனை தளர்த்திவிட்டது போலிருந்தது எனக்கு. அப்படி ரொம்ப நேரம் அவனைப் பார்த்துக் கொண்டிருக்க முடியாதபடி அவன் முகம் வாடி வெளிறிப் போயிருந்தது.

'கெடக்கல்லியா?''

இல்லலெயன்று சொல்ல நா எழவில்லை. தலை அசைப்பில் தோல்வியை சாடை சொன்ன போது அவன் அப்படியே சிலையாய் நின்று கொண்டிருந்தது என் ஈரக் குலையை பிழிந்துவிட்டது.

''கேக்காத இடமில்லை. இனி ஆருட்டெப் போய் கேட்டுப் பாக்க...?''

பார்வையை அவன் முகத்திலிருந்து விலக்கி, பழையபடி தென்னம் மண்டையிலேயே ஊன்றிக் கொண்டிருந்தேன்.

அங்கு நிலவிய நிசப்தத்தை அவனே உடைத்தான்.

''ரஷீத் மச்சான் வெளிநாட்டிலிருந்து வந்து ஒரு வாரமாச்சாம்.''

''வந்திருக்கானா?''

சந்தோஷமாகவேயிருந்தது. நாயாய் அலைந்தற்கு ஆண்டவானாகவே ஒரு வழியைக் காட்டிவிட்டான் போல் தெரிகிறது.

''மச்சானுட்டெ கேட்டுப் பாருங்கொ, நாளை கடைசி நாள்.''

நஜீப் துடிப்பதைக் கண்டபோது அப்படியே இருந்துவிட மனம் வரவில்லை.''

''அவளிட்டையும் கேட்டுப் பாக்கல்லேன்னு வேண்டாம்ப்பா. போய் கேட்டுக் பாக்கேன்.''

புறப்படும்போது மனைவி கஞ்சி குடிக்கச் சொன்னாள். சீக்கிரம் புறப்பட்டுப் போனால் இரவு எட்டரைக்குள்ள பஸ்ஸிற்கு திரும்பி விடலாமென்ற நினைப்பு இருந்ததால் கஞ்சியை நாடி சுணங்கவில்லை.

குடை எடுத்துக்கொண்டு இறங்கும்போது மனைவி நினைவூட்டினாள்.

''சோப்பும் சாரியும் ஸ்ப்ரேயும் கேட்டு வாங்குங்கோ. நம்மொ புள்ளதானே.''

அவள் சொன்னதை கேட்டது பாதி, கேட்காதது பாதி என்று குடையை விரித்துக்கொண்டு ஒண்ணே காலுக்குள் பஸ்ஸை எட்டிப் பிடிக்க நடையை துரிதப்படுத்தனேன். எப்பாடுபட்டாவது இந்த ஆண்டு பரிட்சை எழுதிவிட்டால் நஜீபுக்கு எங்காவது ஒரு வேலையை வாங்கிவிடலாம். அவனுடைய வருவாய் ஒரு சிறு தாங்கலாயிருக்கும். சாலையோர மரங்களும் வீடுகளும் என்னுடைய எதிர்திசையில் ஓடும்போது மருமகனுக்கு கல்லூரி படிப்புக்கு அவ்வப்போது பணம் கொடுத்தது, ஒவ்வொரு பெருநாளுக்கும் புத்தாடை வாங்கி கொடுத்தது, வேலையில்லாமல் அலைந்தபோது உதவி புரிந்தது, பஹறைன் செல்ல அவனுக்கு என்.ஜி.ஓ. ஏற்பாடு செய்து கொடுத்தது எல்லாம் நினைவில் குழுமின.

வெளிநாடு சென்று ஆண்டுகளுக்குப் பிறகு முதல் தடவையோக ஊர் வந்திருக்கிறார்கள். அவனிடத்தில் இப்போது பல மாற்றம் காணலாம். திருமணத்திற்கான ஆதத்தோடு வந்திருக்கக்கூடும். விமானம் ஏறிய பின் பல தபால்கள். மாமனாருக்கு மாட்டுவதற்கும் ஒரு ஏர்கண்டிஷன் மேஷின் அனுப்புவதாக, மாமிக்கு •பிரிட்ஜும் வாஷிங்மெஷினும். என்னுடைய பொருளாதார உன்னத நிலைக்கு ஏற்றவாறு பல ஆடம்பர நாகரிகப் பொருட்கள் அனுப்புவதாக எழுதும் ஒவ்வொரு கடிதமும் மேலும் பல வாக்குறுதிகளால நிரம்பியிருந்தன.

ஒவ்வொரு கடிதம் வரும் போதும் பதில் போடாமல் இருப்பதில்லை. சரிந்து கொண்டிருந்த பொருளாதார நிலையை பதிலில் குறிப்பிடாதது, தன் வறுமை தன்னிடமே இருக்கட்டும் என்றுதான். வாடகை வீட்டில், கோழிக்கூட்டில் மாமனாரும் மாமியாரும் பிள்ளைகளும் கால் நீட்ட இடமில்லாமல் சுருண்டு கொண்டிருக்கையில் •பிரிட்ஜும் வாஷிங்மெஷினும் வைக்க இடம்? மருமகன் விமானத்தில் பறந்த பிறகு, பிறந்த சின்னஞ்சிறு கிராமத்தை விட்டு, தாய் தந்தையரை பரபரப்பாக நகர மத்தியில் ஈரடுக்கு மாடிக் கட்டிடத்தில் பெயர்த்துக் குடி இருத்திய அவனுடைய செழுமையில் பொறாமை கொள்ளவே இல்லை. அவனுக்கு அள்ளிக்கொடு ஆண்டவனே என்று வேண்டத்தான் கைகள் உயர்ந்தன.

ஆறு ஆண்டுகளுக்குப் பின் முதல் தடவையாக ஊருக்கு வந்திருக்கிறானாம். வந்து ஒரு வாரமாகி விட்டதாம். பஸ் இறங்கிய இடத்திலிருந்து வீடு தொலைவில். பெருநகர் பேருந்துகள் நுழையாத நெடுநீளமான ஒரு சந்தின் கடைசியில். ஆட்டோ பிடித்தால் திரும்பி வர எதுவும் மிஞ்சாத ஜேப்பு இருப்பு. சூரியனின் திமிர்ப்பு தணிந்திருந்தாலும், வீசிக் கொண்டிருந்த காற்றில் குளுமை இருந்தாலும் நடக்க இதமாகத்தானிருந்தது. செழுமை நாளில் அடிக்கடி சென்று வந்த நகரமான தார் ரோடுகளும் சந்துகளும் பரிச்சயமானவையாக இருந்தன. முகவரி காட்டி வழிகேட்டுத் தடுமாற வேண்டிய நிலை ஏற்படவில்லை.

புன்னகையுடன் வரவேற்ற தங்கையின் உபசரிப்பில், மனம் குளிர்ந்தது என்று சொல்வதற்கில்லை. அந்த நேரம் அந்த சாக்கடைத் தண்ணி - சாயாவும் ஒரு துண்டுக் கேக்கும், காய்ந்திருந்த கும்பியை சற்று ஈரப்படுத்தித் தேற்றியது ஆசுவாசமாகவே இருந்தது. வீட்டிலிருந்த துபாய் அலங்காரங்களில் பார்வை திரும்பிவிடாத அளவிற்கு சிந்தனையில் சூடேறியிருந்தது. குஷன் நாற்காலிகளும் கண்ணாடி டீப்பாய்களும் வரவேற்பறையை அடைத்துக் கொண்டிருந்தன. அதில் உட்கார்ந்துகொள்ளும் தகுதியை நான் இழந்துவிட்டதை உணர்ந்து,

தங்கை ஒரு மர ஸ்டூலின் மீது சாயாவும் கேக்கும் வைத்துவிட்டு, எனக்கு உட்கார இன்னொரு மர ஸ்டூலை வீட்டுக்குள்ளிருந்து எடுத்து வந்து போட்டபோது என்கண் முன் நஜீப்தான் நின்று கொண்டிருந்தான். குடும்பத்தின் எதிர்காலம் அவனேதான். அவனை எப்பாடுபட்டாவது கரையேற்றியாக வேண்டும். முள் படுக்கையிலானாலும் படுக்க தயக்கமில்லாத இக்கட்டு.

தன் தகுதியின்மையை உணராமல் குஷன் நாற்காலியில் தவறுதலாக இருந்துவிட்ட குற்ற உணர்வோடு, எழும்பி மர ஸ்டூலில் உட்கார்ந்துகொண்டேன். அதில் இருந்த ஆணி ஒன்று பிட்டத்தில் குத்தியபோது வேட்டி கிழிந்துவிடாமல் மெல்ல எடுத்துவிட்டேன். கால்மூட்டும் கையும் ஊன்றி நடக்கும் குதிரையாயிருந்தேன் ஒரு நேரம். அந்த குதிரை மேல் குசாலாக சவாரி செய்து அன்று விளையாடிய சகோதரியின் பார்வையில் அந்நியப்பட்டுப் போன உணர்வின் நிழலாட்டம் இருப்பதாக உணர்ந்தேன். என் உணர்வு பொய்ப்பித்துப் போக நெஞ்சார ஆண்டவனோடு நெருங்கினேன். நஜீபுக்கு ஓர் ஆண்டு வீணாகி விடுமே! என்ற பதற்றம் நெஞ்சிற்குள்.

நகரத்தில் கூடு கட்டிய பிறகு முதல்முறையாக சென்றதால் தங்கை சுக விபரங்கள் கேட்டாள். நஜீபுடைய, மற்ற பிள்ளைகளுடைய படிப்பையும் பற்றிக் கேட்டாள். பருவமடைந்திருக்கும் மகளுக்கு மாப்பிளைத்தரம் பார்ப்பதைப் பற்றிக் கேட்டாள். வியாபாரத்தைப் பற்றி கேட்டாள்.

பரவாயில்லை என்றிருந்தது பதில்.

பதில் சொல்லிக் கொண்டிருக்கும் போது, மருமகன் ஜகஜோதியாக காரில் வந்திறங்கியது, ஏதோ அமைச்சர் வந்திறங்கின தோரணையில். முதலில் ஆள் அடையாளம் தெரியவில்லை. நடையில், உடையில், உடலில், பாவனையில் அவ்வளவு மாற்றங்கள். நெடிய ஆறு வருடங்களின் கலைக்கைகள் பின்னி உண்டு பண்ணிய நவ மாற்றங்கள்.

''மாமா.. எப்பொ வந்தியோ?''

முகமலர்ச்சியுடன் வரவேற்றான்.

அதே குரல்! நாதக் கம்பியைக் காலம் கழற்றி முறுக்கவில்லை. சிரிக்கும் போது விழும் அதே கன்னக் குழிகள்!

''நல்லா இருக்கியாப்பா?''

''நல்லா இருக்கேன். மாமாயெ பார்க்க வரணுமெண்ணுதான் இருக்கேன்.''

'நீ வந்ததை கேள்விப்பட்டதும் நானே வந்துட்டேனில்லியா.''

'''மாமியும் மச்சினன்மாரும் கொளுந்தியும் நல்லா இருக்காங்களா?''

''இருக்காங்கோ.''

''நஜீப் இப்பம் மெடிக்கலா, என்சினியரிங்கா?''

''இல்லப்பா பி.ஏ. கடைசி ஆண்டு.''

''எட்டோ பத்தோ லட்சம் குடுத்து அவனெ மெடிக்கலிலே சேக்கப்படாதா?''

என்னுடைய புன்னகைப்பிற்கு பிறகுள்ள மவுனத்தின் அர்த்தம் அவனுக்கு புரியவில்லை போலிருந்தது.

''இதெல்லாம் ஒரு பெரிய முதல் முடக்குத்தானே, மாமா? திடீரெணு பணம் புரட்ட முடியல்லேண்ணா, எனக்கு எழுதியிருந்தா உடனே அனுப்பித் தருவேன்.''

''அனுப்பியிருப்பா...''

தொழில்நுட்ப கல்லூரிகளில் பேமெண்ட் சீட் கிடைத்ததையும் பி.எஸ்ஸி கம்ப்யூட்டர் சயன்ஸுக்கு அய்ந்துஅ ஆயிரம் நன்கொடை கேட்டதையும் நினைக்காமலிருக்க முடியவில்லை. பார்த்தாலே ஏதாவது கேட்டு விடுவானோ என்று பயந்து விலகும் மக்கள் மத்தியில் வாழ்க்கையை ஓட்டும் போது யாரை அணுகுவது என்று புரியாத திணறலில் தவித்த நாட்கள் மனசுக்குள் பாதயோசை எழுப்பி ஓடிக் கொண்டிருந்தது. ''ஒங்களுக்கு ஒரு ஏசியும் •பிரிட்ஜும் கொண்டு வந்தேன் மாமா. களியல் எஸ்டேட் ஓனர் பீருக்கண்ணு சாகியை சவேரா ஹோட்டல்லே வச்சு பாத்தேன். அவரு ஒரு புதிய ஊடு கட்டி பாலு காச்சூதாட்டு சொன்னாரு.''

''அவரை பழக்கமுண்டா?''

''இல்லை, உங்க மருமோனா என்னு கேட்டாரு. என்ன செய்தாண்ணு கேட்டப்போ பஹ்ரைனிலே நிக்கூதாட்டுசொன்னேன். பாலு காச்சுக்குகூப்பிட்டாரு. சும்மா போவ முடியுமா மாமா? வலிய எஸ்டேட் ஓனரில்லையா? அவருக்கெ நிலைக்கு தகுந்தபடி ஏதாவது இருக்க வேண்டாமா? அந்த ஏசியையும் பிட்ஜையும் அவர் ஊட்டு பாலு காச்சுக்கு அன்பளிப்பா குடுத்துட்டு, இந்தா இப்பம்தான் வாறென்.''

''செய்ய வேண்டியதுதான்.''

''போன உடனே மாமாவுக்கு அனுப்பித் தாறேன். நஜீப்புக்கு ஒரு வாச்சு அனுப்புறேன்.''

பல ஆயிரங்கள் பெறுமதியுள்ள பொருட்களை அனுப்பி வைப்பதாக சொல்லுபவனிடம் சிறு உதவி நாடி வந்ததை எப்படிச் சொல்வது என்று மனக்குழப்பம் எனக்குள். என் மவுனத்தைக் கண்டதும் அவன் அங்கலாய்த்தான்.

''ஏன் மாமா மவுனமா இருக்கிதியோ. ஒங்களெ பாக்க வராத கோபமா?''

''இல்லப்பா. கோபமானா நான் உன்னைப் பார்க்க வருவேனா?''

''வியாபாரம் எப்படியிருக்கு? எக்ஸ்போர்ட் ஏதாவது செய்யீளா?''

அவன் முகத்தைப் பார்த்ததும் சொல்ல பதில் கிடைக்காததால் பார்வையை திருப்பிவிட்டேன்.

''ஏன் ஒண்ணும் பேசல்லெ?''

''இப்பம் வியாபாரம் இல்லப்பா. பெரும் நஷ்டமாப் போச்சு. கடன் அடைக்க வீட்டையும் கடையையும் விற்றுப்போட்டேன். ஒரு வருமானமும் இல்லாமல் சும்மாதான் இருக்கேன்.''

''அவ்வளவு நஷ்டமா?''

''நிமிர முடியாத நஷ்டம்.''

மருமகனுடைய முகத்திலிருந்த களிப்பெல்லாம் மறைவதை கவனிக்காதபடி பார்வையை தரைக்கு திருப்பினேன்.

''திவாலாயிப் போனீளா?''

கேள்வி ஏளனப்படுத்துவது போலிருந்தாலும், பதில் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

''நொடிஞ்சே போனேன்.''

நடையில் தங்கை நின்று கொண்டிருந்தாள். யாரும் எதுவும் பேசவில்லை. அவரவர்களுடைய உள்ளங்களில் எவையெல்லாமோ நுரைத்து பதைத்துக் கொண்டிருப்பது போலிருந்தன அந்த சூழல்.

''மாமா வந்தது?'' குரலில் முன்னிருந்த நளினம் வரண்டு போய்விட்டதாகத் தோன்றியது.

வருகையின் நிஜ நோக்கத்தை மறைத்து சும்மா வந்தாகச் சொல்லத்தான் நாக்கு உயர்ந்தது. மனசில் தேங்கி நின்றிருந்த வார்த்தை நாக்கில் சறுக்கி விழுந்துவிட்டது.

''ஒரு சிறு உதவி நாடி.''

''என்ன உதவி...?'' இப்போது குரலில் சொரசொரப்பிருந்தது அப்பட்டாகத் தெரிய முடிந்தது.

''நஜீபுக்கு நாளை பணம் கட்டினாத்தான் பரிட்சை எழுத முடியும். கடைசி ஆண்டு பணம் கட்டலேண்ணா அவன் படிப்பு பாழாய் போவும். அவன் படிச்சு ஏதாவது ஒரு வேலைக்கு சேர்ந்தாதான்...''

''படிச்சு என்ன செய்ய? அவனை ஏதாவது கடையிலெ வேலைக்கு உடலாமே?''

என்ன சொல்வதென்றறியாத திகைப்பில் அப்படியே தலை குனிந்துவிட்டது. அவனை படிக்க வைத்த குற்றத்திற்காக கூண்டில் விசாரணை கைதியாக தலை குனிந்து நின்று கொண்டிருந்தேன்.

''என்ன உதவி செய்யணும்?'' ஒரு போலீஸ் அதிகாரியின் அதட்டல் குரலாகவேயிருந்தது.

''ஒரு 725 ரூபா கெடச்சா...''

மருமகன் மறுமொழி பேசாமல் பேச முடியாமலோ என்னவோ குஷன் சோபாவில் உட்கார்ந்தபடி பூட்ஸ் காலைத் தூக்கி கண்ணாடி டீப்பாய் மேல் வைத்துக்கொண்டு, நகம் கடித்துத் துப்பிக் கொண்டிருந்தான். தாய் மாமனாருடைய எதிர்பாராத வீழ்ச்சியை செவியுற்ற அதிர்ச்சியில் மனம் நொந்துபோய் உட்கார்ந்திருப்பதாகத் தோன்றியது.

''வருத்தப்படாதப்பா. வாழ்வு தாழ்வு கொடுப்பது ஆண்டவன். தந்தவன் எடுத்துட்டான். வருத்தப்பட என்ன இருக்கு...?'' அவனை ஆறுதல் படுத்த முயன்றேன்.

''மாமா...''

''என்னப்பா..?'' தலையை நிமிர்த்தினேன்.

அவனுடைய தாயாரின் கண்கள் அவனோடு பேசியதை கவனிக்காதது போல் இருந்துவிட்டேன். இன்று அந்த கண்கள் இப்படியெல்லாம் பேசுவதற்காகத்தான் முன்பு அவள் கண்களில் விழுந்த தூசிகளையும் மணல்களையும் ஊதி எடுத்துக் கொடுத்தேன்.

''பழைய மாதிரியல்ல இப்பம் அரபு நாடு. வெயில்லெ கெடந்து நாயா ஒளச்சாத்தான் ஊட்டுக்கு சாப்பாட்டுக்கு ஏதாவது அனுப்ப முடியும். முன்ன மாதிரி சம்பளமுமில்லை. சம்பளங்களை வெட்டி கொறச்சுப் போட்டான் அரபி.''

மகன் அவனுடைய உழைப்புத் துயரத்தைச் சொல்லி முடித்ததும், தங்கை வாசல் திரையை இழுத்து விட்டுக்கொண்டே வீட்டுக்குள்ளே போய்விட்டாள். என் மனசிற்குள் பரந்திருந்த இருட்டு, வெளியேயும் பரந்துவிட்டதை பிறகுதான் தெரிந்துகொண்டேன்.

''ஏதாவது சாப்பிட்டீளா?''

''ஒனக்கெ உம்மா சாயாவும் கேக்கும் தந்தா. அதிலெ அடங்கிப் போச்சு.''

''8.30க்கு கடைசி பஸ்?''

'பஸ் நேரம் கேட்டுத் தெரிஞ்சுட்டுதான் வந்தேனப்பா.''

படி இறங்கி இருட்டைக் கீறினேன். வீட்டு ஜன்னல் கம்பி வழியாக, முனகி எரிந்து கொண்டிருந்த ராந்தல் ஒளி, முற்றத்தில் விழுந்து புற்காடுகள் மூடிக் கொண்டிருந்த நரம்பு தடத்தைக் காட்டியது.

கால் சொடக்கு சத்தம் கேட்டதும் நஜீபே வந்து கதவைத் திறந்தான். அவன் பின்னால் மனைவி ஆவலோடு வந்து கேட்டாள்: ''புள்ள என்னவெல்லாம் தந்தான்?''

''மச்சான் ரூபா தந்துதா?''

கேள்விகள் சரங்களாக இதயத்தை தாக்கிக் கொண்டிருந்தன. கையில் எடுத்துச்சென்ற குடை மட்டுமே இருப்பதைக் கண்டு மனைவி சோர்ந்து நின்றாள்.

''வாப்பா!'' அதல பாதாளத்தில் கிடந்து கைநீட்டி காப்பாற்றக் கூப்பிடும் அவலக் குரலாக இருந்தது நஜீபின் கூப்பிடல்.

''முன்னெ கடைசி பரிட்சைக்கு கட்ட 60 ரூபா தருவாரில்லாமெ உன் வாப்பாவின் கல்லூரி படிப்பு நிண்ணு போனது ஒனக்குத் தெரியாது. எனக்கெ அதே அனுபவம் இப்ப உனக்கும். நாளை உன் மகனுக்கெ படிப்பும் இதுபோல நிப்பாட்ட வேண்டிய சந்தர்ப்பம் வந்தாலும் நீ சோர்ந்து போகாதப்பா. இதெல்லாம் காலத்துக்கெ ஆவர்த்தனம்.''

மகனும் மனைவியும் உறங்கினார்களா அல்லது ஏமாற்றங்களின் பாறை அழுத்தத்தால் உறங்காமல் கிடக்கின்றனவா என்று கவனிக்க ஒவ்வாத மனநிலை. எப்படியும் அவர்களுடைய காலை விடியட்டும். உறங்காத என் கண்கள் கண்ணாடி உடைந்த ஷோகேஷில் சென்றன. அங்கு என் எதிரியின் கையிலிருந்து கொண்டிருந்த கூரிய வாள் பளபளத்துக் கொண்டிருந்தது. ●

# ஆஸ்திரேலிய ஆதிவாசி இளைஞனுடன் ஒருநாள்

**நடேசன்**

இமயமலை சிறு குழந்தைபோல் ஒவ்வொரு வருடமும் இன்னமும் வளர்ந்து வருகிறது. இமயமலையின் வயது 50 மில்லியன் வருடங்கள். ஆஸ்திரேலியாவின் மத்தியில் 348 மீட்டர் உயரமான கல் மலையுள்ளது. அதனது வயது 500 மில்லியன் வருடங்கள். அது வளரவில்லை.

மத்திய ஆஸ்திரேலியாவில் உள்ள இந்த மலை ஐயேர் கல்மலை (Ayers Rock) என்று ஒரு காலத்தில் கூறப்பட்டது. இந்துக்களுக்கு இமயமலை எப்படி புனிதமானதோ, அப்படி ஆஸ்திரேலிய ஆதிவாசிகளுக்கு உலறு கல்மலை புனிதமானது. அனன்கு (Anangu) என்ற ஆஸ்திரேலிய ஆதிவாசிகள் இனக்குழுவிற்கு சொந்தமான பிரதேசத்தில் இந்த உலறு கல்மலையும் அதற்கு 25 கிலோமீட்டர் தூரத்தில் பல கல்மலைகளது சேர்க்கையால் உருவாகிய கடா ருயுரா (Kata-Tjuta) என்ற இன்னொன்றும் இருக்கிறது. இவற்றிலிருந்தே உயிர்களது தோற்றம் ஏற்பட்டதென இந்தப் பகுதி ஆதிவாசிகள் நம்புகிறார்கள். அதனால், அனன்கு இனக்குழுவின் புனிதப் பிரதேசமாக நம்பப்படுகிறது.

இருபத்தி இரண்டாயிரம் வருடங்கள் முன்பே இந்தப் பகுதியில் மனிதர்கள் வாழ்ந்த ஆதாரங்கள் உள்ளது. ஆஸ்திரேலிய அரசு 1985ஆம் ஆண்டு இந்த கல்மலைகள் உள்ள பகுதியை தேசிய வனமாக அங்கீகரித்து அனன்கு ஆதிவாசிகளிடம் கையளித்துவிட்டது. அவர்களிடமிருந்து 99 வருட வாடகைக்குப் பெற்று இந்தப் பகுதியில் சுற்றுலா மையம் ஒன்றை அமைத்துள்ளது. இந்தப் புனிதப் பகுதிக்கு சிறிது தூரத்தில் விமான நிலையம், ஹோட்டல்கள், இங்கு வேலை செய்பவர்களுக்குத் தங்கும் வசதிகள் என்று தற்போது உருவாக்கியிருக்கிறார்கள். இந்த இடம் தற்பொழுது ஐக்கிய நாடுகளின் கல்வி கலாச்சார நிறுவனத்தால் உலகின் முக்கிய இடங்களில் (World Heritage) ஒன்றாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது.

540 மில்லியன் வருடத்திற்கு முன்பாக ஆஸ்திரேலியாவின் மத்திய பகுதிகள் பரவைக் கடலாக இருந்தன. இந்தக் கடல் பசுபிக் சமுத்திரத்துடன் இணைந்திருந்தது. பிற்காலத்தில் படிப்படியாக நடந்த கண்டங்களின் நகர்வால் இந்தக் கற்பாறைகள் உருவாகியதாகச் சொல்கிறார்கள்.

இந்தக் கல் மலைகள் தனியான பாறையல்ல. தொடர்ச்சியான அழுத்தத்தால் மண், கல், கனிப்பொருட்கள் சேர்ந்து உருவாகிய சாண்ட் ஸ்ரோன் (Sand Stone) வகையானவை. நிலத்தின் மேல் தெரிவது மிகவும் குறைவானது. நிலத்தின் கீழ் கிட்டத்தட்ட 45 கிலோமீட்டர்கள் இந்தக் கல்மலைகள் புதைந்து இருப்பதாகச் சொல்கிறார்கள்.

இந்தக் கல்மலையில் இரும்பு போன்ற தாதுப் பொருட்கள் இருப்பதால் சூரிய உதயத்தின் போதும், மறையும் போதும் பல வர்ணத்தில் தெரியும். இதனால் கல்மலைகளைச் சுற்றிய திறந்த வெளியில் மக்கள் கூடுவார்கள், உணவுண்ணுவார்கள், ஆங்கிலேயரது காலத்தில் ஆப்கானிஸ்தானியரால் ஆஸ்திரேலியாவிற்கு கொண்டு வரப்பட்ட ஒட்டகங்களில் சவாரி செய்வார்கள். இதைவிடப் பகலில் சூரிய வெளிச்சத்தை உள்வாங்கி இரவில் ஒளிரக்கூடிய கண்ணாடிக் குமிழ்கள் இருப்பதால் இருண்ட இரவில் இந்தப் பகுதி ரியூலிப் மலர்களின் வனம்போல் காட்சி தரும்.

இரண்டு நாட்கள் நாங்கள் இந்த காட்சிகளைப் பார்த்தோம். மூன்றாவது நாள் ஆதிவாசிகளது வாழ்வை அறிவதற்கும், அவர்கள் வாழ்ந்த இடங்களைப் பார்ப்பதற்கும் ஒரு நாளை ஒதுக்கினோம். அதற்கான பிரயாணப் பதிவை செய்துவிட்டு அங்குள்ள அருங்காட்சியகத்திற்கு சென்றேன்.

ஆதிவாசிகளின் அருங்காட்சியகத்தின் உள்ளே சென்றபோது, கதவருகே உள்ள கண்ணாடி உண்டியலில், "இதுவரை எமது மண்ணில் இருந்து பெரிதளவு செல்வத்தை எடுத்தீர்கள். அதிலிருந்து சிறிது பணத்தை இந்த உண்டியலில் போடுங்கள்" என்ற வார்த்தை ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது. வார்த்தைகளின் வலிமையை உணர்ந்தேன். அந்தக் கூர்மையான சொற்கள் என் இதயத்தில் ஆழமாகத் தைத்தது.

ஆஸ்திரேலியாவில் 1770ஆம் ஆண்டு இறங்கிய ஆங்கிலேயர் மட்டுமல்ல, அதன்பின்பு வந்த ஐரோப்பியர்கள் மற்றும் என்போன்ற ஏராளமான குடியேற்றவாசிகளும் இந்த நாட்டின் செல்வத்தை அனுபவிக்கிறோம். ஆஸ்திரேலியா இரும்புத் தாது, கரி, வைரம், தங்கம், அலுமினியம் என்று நிலத்தில் பெறப்பட்ட பொருட்களிலே அன்னிய செலாவணியை ஈட்டும்போது அந்த வார்த்தைகள் மேலும் அழுத்தமான அர்த்தமுள்ளதாகின்றன.



ஆஸ்திரேலிய சனத்தொகையில் 3 வீதமான மக்கள் மட்டுமே ஆதிவாசிகளாக இருப்பதால் சிட்னி, மெல்பன் போன்ற நகரங்களில் வாழ்ந்தால், எந்த ஆதிவாசிகளையும் சந்திக்காது பிறந்து, வாழ்ந்து, இறந்துவிடலாம். சிட்னியில் படிக்கும் காலத்தில் ரெட்பேண் என்ற பகுதியில் வாழ்ந்த ஆதிவாசிகளையும் பின்பு பயணம் சென்றபோது அங்கொன்று



இங்கொன்றாக கண்டதல்லாது ஆதிவாசிகளோடு பழகிய அனுபவம் எனக்கில்லை. எவ்வளவு படித்தாலும், மியூசியங்களைப் பார்த்தாலும், இரத்தமும் சதையுமான மனிதர்களோடு பழகும் அனுபவம் வித்தியாசமானது என்பதை இம்முறை அறிந்துகொண்டேன்.

ஒருநாள் எங்களை அந்த தேசியவனத்தை சுற்றிகாட்ட ஒரு அனன்கு ஆதிவாசியான வழிகாட்டியை ஒழுங்கு செய்தோம். இருபத்தாறு வயதான கெல் வட்சன், அவனது மனைவியுடன் வந்தான்.

கிட்டத்தட்ட நூறு கிலோமீட்டருக்கு அந்த தேசியவனத்தில் நாள் முழுவதும் பிரயாணம் செய்தோம். நகர மக்களாகிய நாங்கள் அங்கு தனித்து விடப்பட்டால் ஒருநாள் தாங்கமாட்டோம். வருடத்திற்கு 250 மி.மீட்டார்கள் மழை பெய்யும் பாலைவனம். விரிந்த ஒரே அமைப்பைக் கொண்ட மணற் பிரதேத்தில் இரும்புத்தாது கலந்து இருப்பதால் செம்மண் பிரதேசம். இடைக்கிடை பாலைவன ஓக்கெனும் மரம் நீண்டு வானத்தை நோக்கியிருந்தது. அதைக்கூர்ந்து பார்த்தால் கசூர்ரினா எனப்படும் சவுக்கு மரம். அந்தச் சவுக்கு மரத்தின் கீழ் மாடே தின்னாத கடற்கரைக் கள்ளிபோன்ற புல்லு வளர்ந்திருந்தது. இடைக்கிடை ஆவாரம் செடி போன்ற மல்கா மரங்கள் பற்றைகளாக ஆள் உயரத்திற்கு வளர்ந்திருந்தது.

நாங்கள் சென்ற காலம் குளிர்காலமானதால் பச்சையாகத் தெரிந்தது. மழைக்காலத்தில் காட்டு பூக்கள் பூத்து அழகாகத் தெரியுமென்றார்கள். பாறைக்கற்கள் கொண்ட பிரதேசத்தில் மழைக் காலத்தில் தண்ணீர் தேங்கியிருக்கும். இந்தப் பிரதேசத்தில் தற்பொழுது ஒட்டகங்கள் கட்டாக்காலியாக ஆட்சி செய்கின்றன. 800000-1 மில்லியனாக இவை பெருகி அந்த வனத்தை நாசம் செய்கின்றன. பாலைவனத்தில் வாழும் மற்றைய உயிரினங்களைப் பகலில் காண்பது அபூர்வம்.

இப்படியான இடத்தில் மனிதர்கள் எப்படி வாழ்ந்தார்கள் என்று எண்ணியபோது நாங்கள் சென்ற வாகனம் ஒரு இடத்தில் நின்றது. அந்த இடம் ஆதிவாசி மக்கள் தங்கி செல்லும் பிக்னிக் பிரதேசம். தற்பொழுது உல்லாசப் பிரயாணிகள் தங்கிச் செல்வதால் கழிப்பறை அமைந்துள்ளது.

அங்குள்ள சிறிய தகரக் கொட்டிலின் உள்ளே எங்களுக்கு தேநீர் தந்தார்கள். சுற்றிப் பார்த்தபோது செட்டைகள் பல நிறத்தில் குவிந்து பறவைகளின் சுடுகாடாகத் தெரிந்தது.

ஒரு மரத்தாலான ஈட்டியை கெல் வட்சன் எம்மிடம் தந்து தூர எறியச் சொன்னான். நான் எறிந்தபோது *50* அடிகள் கூடபோகவில்லை. ஆனால், அவன் எறிந்தபோது *200* அடிகள் தூரம் சென்றது. "இந்த ஈட்டியால் பெரிய மிருகங்களைத் தாக்குவோம்" என்றான்.

"இந்தச் செட்டைகள் என்ன?" என்றபோது, "அது பறவைகளை உண்டிவில் கொண்டு தாக்கி நெருப்பில் வாட்டுவோம். அப்படியான செட்டைகளே நீங்கள் பார்ப்பது" என்றான்.

எங்களுடன் இருந்து தேநீரைக் குடித்தபடி, "நான் எனது கதையை சொல்லப் போகிறேன்" என்றான்.



நாங்கள் கதை கேட்கத் தயாராகினோம். நான், எனது மனைவி, எங்கள் வயதொத்த ஒரு ஆஸ்திரேலிய தம்பதிகள். ஐந்தாவதாக இருபத்தைந்து வயதான கைலி என்ற இளம் பெண் கொண்ட சிறியது எமது குழு. எல்லோரும் மணல் பரப்பில் இருந்த மரக் குற்றிகளில் இருந்தோம்.

எமது அருகில் குந்தியிருந்து கொண்டு, தனது சிறிய பையில் இருந்த கருப்பு வெள்ளை படத்தில் உள்ள வயதான ஆதிவாசி மனிதரைக் காட்டி, "இவர் எனது பூட்டன். இவரே எமது இனக்குழுவுக்குத் தலைவர். மூன்று மனைவிகளை வைத்திருந்தவர். ஒருநாள் நண்பர்கள் இருவருடன் சேர்ந்து ஒட்டகம் ஒன்றை ஈட்டியால் கொன்றுவிட்டார். இதனால் அலிஸ்பி ரிங்கிலிருந்து ஒரு பொலிஸ் குழு வந்து அவரைப் பிடித்து கை கால் கழுத்து எல்லாம் சங்கிலி போட்டு அலிஸ்பி ரிங் கொண்டு சென்றார்கள். இரவானதும் வழியில் இளைப்பாறியபோது பொலிசாரிடமிருந்து தப்பியதால் பூட்டன் தொடர்ச்சியாகத் தப்பி ஓடிக்கொண்டிருந்தார். இறுதியில் தென் ஆஸ்திரேலியாவில் ஆயிரம் கிலோமீட்டர் அப்பால் பிடிபட்டபோது நீதிபதியால் தென் ஆஸ்திரேலியாவில் இருக்கக்கூடாது என்ற எச்சரிக்கையுடன் விடுதலை செய்யப்பட்டார். பிற்காலத்தில் இந்தப் பிரதேசம் ஆதிவாசிகளுக்கு உரிமையானதென்ற போராட்டத்தை எடுத்தபின் சிறிதுகாலத்தில் இறந்துவிட்டார்.

எனது குடும்பத்தில் எல்லோரும் கஸ்டப்பட்டு வளர்ந்தவர்கள். எனது அம்மா ஆஸ்திரேலிய வெள்ளை விவசாயி ஒருவரிடம் வேலை செய்தபோது ஏற்பட்ட உறவால் நான் பிறந்தேன். நான் ஒரு அரைசாதி" என்று தனது கோதுமை நிறமான தோலைக் காட்டினான் கெல் வட்சன்.

அவனைப் தனியாக மெல்பேனில் பார்த்தால், கூரிய நாசியுள்ள கர்நாடகா அல்லது ஆந்திரப் பிரதேச இந்தியன் என நினைத்திருப்பேன்.

மற்றொரு வரைபடத்தை எடுத்து தனது பூட்டன் ஆயிரக்கணக்கான கிலோமீட்டர்கள் தப்பி ஓடிய பாதையை காட்டினான். "அம்மா குடிகாரியாகி விட்டதால் என்னை, எனது பேத்தியே வளர்த்தார். எனது மனைவியும் இதே குழுவை சேர்ந்தவர்" என்றான்.

எங்களோடு வந்தாலும் அவனது மனைவி வெட்கத்துடன் அங்குள்ள சவுக்கு மரத்தருகே நின்றாள். அவள் கருமையான நிறமும் விரிந்த மூக்குடனும் பொதுவான ஆதிவாசியின் தோற்றத்தைக் கொண்டவள்.

"எனது பூட்டனின் பெயர்தான் உலறு. இந்த கல்மலையின் பெயர் உலறு."

கெல் வாட்சன் ஒருவிதத்தில் ஆண்ட பரம்பரை என நினைத்தேன். ஆரம்பத்திலே ஆதிவாசிகள், அவர்களை மட்டுமல்ல அவர்கள் வீடுகள் போன்றவற்றையும் படமெடுப்பதை விரும்புவதில்லை எனச் சொல்லப்பட்டிருந்தது.

வாகனத்தில் சிறிது தூரம் சென்றதும் அங்கு ஒரு மரத்தின் வேரைக் கிண்டி அந்த வேரின் நடுவில் உள்ள ஒரு கூட்டு புழுவை (Witchetty Grub) காட்டி, "இது எங்களது உணவு" என்றபோது என்னால் போட்டோ மட்டும் எடுக்க முடிந்தது. பின்பு நெருப்பில் வாட்டியபோது அதைத் தின்றேன். இறாலுக்கும் கணவாய்க்கும் இடைப்பட்ட சுவையாக இருந்தது.

வேறொரு இடத்தில் ஒரு மரத்தின் கிளையை உடைத்து அதில் வேர்வை போல் கசிந்திருந்ததைக் காட்டி, "இதில் தேன் துளிகள் இருக்கு" என்றபோது





நான் நம்பவில்லை.

“பாலைவனத்தில் தேனியிராது. ஆனால், இந்த மரத்தில் கசிவதை நக்குவோம்” என்றபோது நானும் நக்கினேன். இனிப்பாக இருந்தது.

“இந்தப் பிரதேசத்தில் தண்ணீர் எப்படி?” என்ற போது கல்லுப்பாறைகளில் தேங்கி நின்ற தண்ணீரைக் காட்டினான். அப்படியான இடங்களில் பெண்கள் தண்ணீர் விட்டு உணவை அரைப்பார்கள். ஆவரை போன்ற ஒரு மரத்தின் காய்களை அரைத்துத் தின்னுவார்கள் என அதற்கான கல்லையும் எடுத்துக்காட்டினான்.

ஆஸ்திரேலிய ஆதிவாசிகள் தனித்தன்மையானவர்கள். 500 மேற்பட்ட இனக் குழுவினர், 750 மொழிகள் பேசியவர்களிடம் தற்பொழுது 40 மொழிகளே எஞ்சியுள்ளது. கற்கால மனிதர்களாக எந்தப் பயிர் செய்கை இல்லாமல் இயற்கையில் கிடைக்கும் உணவை உண்டார்கள். கப்டன் குக் வரும்போது கிட்டத்தட்ட 3 இலட்சம் மக்களே இந்தப் பெரிய நிலப்பரப்பில் வாழ்ந்தார்கள். அதிக உணவுத் தேவை இருக்கவில்லை. இயற்கையில் கிடைத்ததே போதுமானதாக இருந்தது. இறுதி வரையும் நாடோடிகளாக இருந்ததால் வீடு அல்லது உறைவிடமற்று வாழ்ந்திருக்கிறார்கள். எதிரிகளே இல்லை. பாதுகாப்புத் தேவை இல்லாதபடியால் அரசோ ஆயுதங்களோ தேவையில்லை. பறவைகள், கங்காரு போன்ற மிருகங்களை வேட்டையாட மர ஈட்டி மட்டுமே போதுமானதாக இருந்தது. மற்றைய சமூகங்களில் கற்காலம், தாமிரக் காலம், இறுதியாக இரும்பு - பின் உருக்கு காலமென வந்தது.

போரில்லை என்பதால் ஆயுதத் தேவையில்லை. எமக்கு மக்கள் தொகை கூடி உணவுத் தேவை வந்தால் பயிரிடுகிறோம்; கால்நடை வளர்க்கிறோம். கலாச்சாரங்கள் தேவைகளை வைத்தே மாற்றமடைகின்றன. ஆயுதம், உணவுப் பொருள் தேவையற்றவர்களாக இருந்தவர்களை ஆதிவாசிகள் அல்லது நாகரிகமற்றவர்கள் எனப் பெயரிடுகிறோம்.

வீட்டுக்குள் இருக்கும் எங்களுக்கு இரவு ஒன்றே. அல்லாவிடில் முன்னிரவு பின்னிரவு என்போம். வெளியே தூங்கும் ஆதிவாசிகளின் மொழியில் இரவை எட்டாகப் பிரித்து சொல்வார்கள். அவர்களிடம் எழுத்து மொழியில்லை. அரசு இருந்து வரி வசூலித்தால் அவர்களுக்கு மொழியில் பதிவு வைக்கவேண்டிய தேவையிருக்கும். அரசு இல்லை. ஆனபடியால் எழுத்துத் தேவையில்லை.

அவர்களிடம் கதைகள், பாட்டு, நடனம் உண்டு. இலக்கியமுள்ளது. கெல் வட்சன் என்னிடம் கூறிய கதை அவனுக்கு வாய்வழியாக பாட்டி சொன்னது. அவர்களது கதைகள் கனவுகளைக் கொண்டவை. அவைகள் பாடலாகவும் அழகான சித்திரமாகவும் வரையப்படுகிறது. தலைமுறையாக கடத்தப்படுகிறது.

ஆஸ்திரேலிய ஆதிவாசிகள் ஓவியம் உலகத்திலே தனித்தன்மையானது. 20ஆம் நூற்றாண்டின் ஆரம்பக் காலத்தில் பிக்காஸோ போன்றவர்களால் உருவாகிய அரூபமான ஓவிய வகை ஐரோப்பாவைச் சேர்ந்தது. ஆஸ்திரேலிய ஆதிவாசிகளின் புள்ளிகளாலான ஓவியம் எத்தனை ஆயிரம் வருடங்கள் முந்தியது? கனவுகளையும் காட்சிகளையும் உருவங்களாக்காது, புள்ளிகளாக்கி அரூபமாக வெளிப்படுத்துகிறார்கள்.

இறுதியில் கெல் வட்சனும் மனைவியும் எமக்கு விடை கொடுத்துவிட்டு தங்கள் குடியிருப்பை நோக்கிச் சென்றபோது எனது விழிகள் அவர்களது முதுகில் இருந்தது. இதயத்தில் குற்ற உணர்வு நிறைந்திருந்தது. கலங்கிய மனத்துடன் ஒட்டகத்திற்கு கூடாரத்தைக் கொடுத்த வழிபோக்கனது கதையை நினைத்தபடி அங்கிருந்து வந்தேன். ●

**நடேசன் <uthayam12@gmail.com>**

# ஒவ்வாமை


## வைதீஸ்வரன்

**ஓவியம்: Cassandra Linnea Auker**


இரவு கடந்து மணி நான்காகிவிட்டது. சாம்பு சுருண்டு படுத்துக்கொண்டு அந்த முள் நகருவதையே பார்த்துக் கொண்டிருந்தான். அவன் நெஞ்சை ஒருகைபிடித்துக்கொண்டே இருந்தது. அந்த இருமல் இன்னும் வரவில்லை!

கடந்த ஒரு வாரமாக அவன் இந்த நேரத்தில் பயங்கரமாகக் குலுங்கிக் குலுங்கி இருமிக் கொண்டிருப்பான். முழங்கால்களை மடித்துக்கொண்டு தலையை தலையணையில் ஓயாமல் முட்டிக்கொண்டு வயிற்றை எக்கி எக்கி இருமிக் கொண்டிருப்பான். வீடே நிலைகுலைந்து போயிருக்கும். செய்வதற்கு எதுவுமில்லாமல் அவன் அம்மாவும் அப்பாவும் அரற்றிக் கொண்டிருப்பார்கள். அம்மா முதுகைத் தடவித் தடவிக் கொடுப்பாள். சாம்புவின் முகமெல்லாம் கண்ணீரும் சளியுமாக மூச்சுக்குத் தவித்தவாறு பதறிக் கொண்டிருக்கும். வெளியில் நிரம்பி இருந்த அத்தனை காற்றும் அவன் நுரையீரலுக்கு மட்டும் எப்படி போகாமல் விரோதமாக இருக்கிறது?

இந்த இருமல் வேதனை அவனுக்கு சில மாதங்களுக்கு முன்பாகவே ஆரம்பித்திருந்தது. அவ்வப்போது குடும்ப டாக்டர் வந்து ஊசி போட்டு மாத்திரை கொடுப்பார். "இது வியாதியல்ல. ஏதோ அலர்ஜி... ஒவ்வாமை" என்று சொல்லுவார். ஓரளவு சகித்துக்கொள்ளும்படியாக பள்ளிக்கூடத்துக்குப் போக முடிந்தது. ஆனால், இந்த முறை அந்த அவஸ்தை மிகவும் தீவிரமாகிவிட்டது. எழுந்து நடக்க முடியாத அளவுக்கு மூச்சு இரைத்தது. அநேகமாக படுத்த படுக்கையாகி விட்டான்.

ஒரு வாரமாக பள்ளிக்கூடம் போகமுடியாமல், சாம்பு இந்த அவஸ்தையில் வீட்டில் முடங்கிக் கிடப்பதை நினைத்து நினைத்து துக்கப்பட்டுக் கொண்டிருந்தான். இன்றாவது எப்படியாவது பள்ளிக்கூடம் போய்விட வேண்டும். அவன் படிப்பதில் எப்போதும் மிகுந்த ஆசையும் அக்கறையும் உள்ளவன். அன்றன்று பாடங்களைப் படிப்பதிலும் வீட்டுப் பாடங்களைக் கருத்தாக எழுதிக்கொண்டு போவதிலும் கவனமாக இருப்பான்.

உடம்பின் அவஸ்தையைவிட இப்படி ஒரு வாரமாக பள்ளிப் பாடங்களைத் தவறவிட்ட வருத்தம் அவன் மனதை பாரமாக்கிக் கொண்டிருந்தது. எப்படியாவது இன்றைக்குப் பள்ளிக்கூடம் போய்விட வேண்டும்! என்று ஆதங்கத்துடன் நினைத்துக்கொண்டான்.

ஏதோ சித்தவைத்தியர் மூலமாகத் தழைகளையும் மூலிகைகளையும் காய்ச்சிக் கஷாயம் வைத்து இரண்டு நாட்களாக கொடுத்துக்கொண்டிருந்தார்கள். இருமல் கொஞ்சம் கட்டுப்பாட்டுக்கு வந்து கொண்டிருந்தது, கொஞ்சம் வேதனைகள் குறைந்தாலும் விடியலில் நான்கு மணியானால் இந்த இருமல் பிசாசு அவனைப் பிடித்துக்கொள்ள ஆரம்பித்தது.



சாம்பு இன்றும் அந்த கடிகாரத்தைப் பயத்துடன் நெஞ்சைப் பிடித்துக்கொண்டு பார்த்துக் கொண்டிருந்தான். நான்கு மணி ஆகும் போது அவனை உலுக்கி வருத்தக்கூடிய அந்த இருமல் ஆரம்பமாகப் போவதை நினைத்து பயத்துடன் பார்த்துக் கொண்டே இருந்தான். ஆனால், அதிசயமாக அவன் சாதாரணமாக மூச்சுவிட்டுக் கொண்டிருந்தான். அவனுக்கு சரியாகிவிட்டதா! அவனால் நம்ப முடியவில்லை! அவனுக்குள் சந்தோஷம் நிரம்பித் ததும்பிக் கொண்டிருந்தது. ஆனாலும், துக்கம் தொண்டையை அடைத்துக்கொண்டு கண்ணில் நீர் தாரையாக வழிந்து கொண்டிருந்தது.

சாம்புவின் அவஸ்தையை வழக்கம் போல் எதிர்பார்த்தவாறு அவன் அம்மாவும் நான்கு மணியானால் எழுந்துவிடுவாள். இன்றைக்கு வீட்டிலிருமல் சத்தமே இல்லாமல் இருந்ததால் அவளுக்கு நம்ப முடியாமல் இருந்தது. எழுந்து போய் சாம்புவை பார்த்தாள். சாம்பு உட்கார்ந்து கொண்டிருந்தான்.

"என்னடா கண்ணூ! ஒனக்கு நன்னாயிடுத்தாடா! ."

அம்மா அவனை நெருங்கி அவன் தலையையும் முதுகையும் வருடிவிட்டாள். அவன் அம்மாவைக் கட்டிக்கொண்டான். அவள் கண்ணில் நீர் வழிந்தது.

"அம்மா! இன்னிக்கு பள்ளிக்கூடம் போறேம்மா! "

"தைரியமா போய்ட்டு வாடாப்பா! உனக்கு உடம்பு சரியாயிடுத்து. இனிமே அந்த பீடை இருமல் ஒனக்கு வராது. எழுந்து வந்து குளி. சாமிக்கு நமஸ்காரம் பண்ணு."

அவனுக்கும் பரபரப்பாக இருந்தது.

சாம்பு தயாராகிவிட்டான். பாட புத்தகங்களையெல்லாம் பார்த்து பைக்குள் போட்டுக் கொண்டான். சாம்புவின் அப்பா அவனை கவலையுடன் பார்த்துக்கொண்டு நின்றார்.

"சாம்பு. நெஜமாகவே சரியாயிடுத்தாடா? ஸ்கூலுக்கு போறயா?" என்று முதுகைத் தடவிக்கொண்டே சற்று கவலையுடன் கேட்டார்.

"சரியாயிடுத்துப்பா! நான் போறேன். இன்னும் ரெண்டு வாரத்துலே பரிட்சை வந்துடும்! " என்று பையை எடுத்து தோளில் மாட்டிக்கொண்டான்.

பிறகு சட்டென்று அப்பாவைப் பார்த்தான்.

"அப்பா. எனக்கு இப்பத்தான் நினைவுக்கு வந்தது. நான் ஒரு வாரமா ஸ்கூலுக்கு போகலே! எங்க க்ளாஸ் டீச்சர், டாக்டர் கிட்டேருந்து லெட்டர் கேப்பாங்க! "

"ஆமாம். எனக்குக்கூட மறந்து போயிடுத்து! இப்ப யார்கிட்டே லெட்டர் வாங்கலாம்? சித்த வைத்தியரெல்லாம் லெட்டர் கொடுக்க மாட்டாங்க! அப்படிக் கொடுத்தாலும் ஸ்கூல்ல ஒத்துக்க மாட்டாங்க! "

"இதுக்கு என்ன கஷ்டம்! பக்கத்துத் தெருவுலதான் நம்ம டாக்டர் ஈஸ்வர மாமா இருக்காரே! அவரு கிட்டே சொல்லி ஒரு சர்டிபிகேட் வாங்கிடுங்களேன்! " என்றாள் அம்மா அவசரமாக.

"அதுவும் நல்ல யோசனைதான்! " அப்பா சாம்புவைப் பார்த்து சொன்னார்.

ஈஸ்வரன் அவர்கள் குடும்ப டாக்டர். சாம்புவையும் அவர் அப்பாவையும் பார்த்தவுடன் சந்தோஷமாக சிரித்தார்.

"என்னடா சாம்பூ, உடம்பு நன்னாயிடுத்தா?



என்று கேட்டுக்கொண்டே அவன் முதுகைத் தட்டிக் கொடுத்தார்.

“இன்னிக்குப் பரவாயில்லே! அதான் ஸ்கூலுக்கு போறேன்னு பிடிவாதம் பிடிக்கிறான். ஒரு சர்டிபிகேட் வேணும்!” என்றார் சாம்புவின் அப்பா.

“ஸ்கூலுக்குப் போறதுலே அக்கறையா இருக்கானே, உங்க பிள்ளை! நல்ல பையன்தான்” என்று டாக்டர் ஈஸ்வரன் அவன் மார்பில் ஸ்டெதாஸ்கோப்பை வைத்து பரிசோதித்தார். பிறகு சற்று நீண்ட யோசனையுடன், “ஸர்டிபிகேட் கொடுக்கறேன். ஆனா அதிகம் அலையாமே இருக்கணும்!” என்றார்.

சாம்பு சர்டிபிகேட்டை மகிழ்ச்சியுடன் பையில் போட்டுக்கொண்டு அப்பாவுடன் சைக்கிளில் போய் பள்ளிக்கூடத்தில் இறங்கிக்கொண்டான்.

பள்ளிக்கூட வாசலில் இருந்து அவன் வகுப்புக்குப் போக அந்தப் புல்வெளி மைதானத்தைக் கடந்து போகவேண்டும். சாம்பு பரபரப்பாக விரைந்து போய்க் கொண்டிருந்தான். இரண்டு வாரங்களுக்கு பின் அவன் பள்ளிக்கூடம் போகிறான்! அவனுக்குள் அந்தக் கவலை பரவிக் கொண்டிருந்தது. தூரத்தில் சில பையன்கள் கூடி நின்று கொண்டிருந்தார்கள். அங்கே ட்ரில் மாஸ்டர் மகிமைதாஸும் நின்று கொண்டிருந்தார்.

மகிமைதாஸ் மாஸ்டரைப் பார்த்தாலே பொதுவாக பையங்களுக்கு ஒரு பயம் வந்துவிடும். அவருடைய கருமையான முகத்தில் முறுக்கு மீசையும் எப்போது சற்று சிவப்பாகவே இருக்கும் கண்களும் கட்டைக் குரலும் பையன்களை கைகட்டி நிற்கச் சொல்லும். ட்ரில் க்ளாஸில் அவர் சொன்னபடி கை கால்களை நீட்டிப் பயிற்சி செய்யாவிட்டால் அவர் தன் பிகில் மாட்டியிருக்கும் ரப்பரால் சுளீரென்று அடிப்பார். “ஏன்னடா பெராக்குப் பாக்கறே?” என்று கத்துவார்.

சாம்புவால் ஒரு சம்பவம் மறக்கவே முடியாமல் பதிந்து போயிருந்தது. அன்று பையன்களை குனிந்தும் நிமிர்ந்தும் வளைந்தும் நிற்கச் சொல்லிக் கொண்டிருந்தார். பிறகு கைகளை அகலமாக விரித்து நிற்கச் சொன்னார். எல்லோரும் அப்படியே நின்று கொண்டிருந்தார்கள். அப்போது அவருக்குத் தெரிந்த ஒருவர் அவருடன் பேச வந்தார்.

கிமைதாஸ் அவருடன் பேசிக் கொண்டே இருந்தார். ஐந்து நிமிஷத்துக்கு மேல் பேச்சு நீண்டுகொண்டே இருந்தது. பையன்களுக்கு கைகளின் வலி தாங்கவில்லை. நரம்புகள் விண்ணென்று இழுத்துக்கொண்டு நின்றது. அதற்கு மேலும் கைகளை விரித்து நிற்க முடியாமல் எல்லோரும் நெளிந்துகொண்டே இருந்தார்கள். ட்ரில் மாஸ்டர் கவலைப்படவே இல்லை. சாம்பு வலி தாங்க முடியாமல் சற்றுக் கைகளை கீழே இறக்கினான். மகிமைதாஸ் அப்போதுதான் பேச்சை முடித்துக்கொண்டு அவனைப் பார்த்தார். எல்லோரையும் கைகளை இறக்க சொல்லிவிட்டு சாம்புவை நெருங்கி சுளீரென்று ரப்பரால் இரண்டு முறை அடித்தார். “ஏன்னடா! அவ்வளவு வலியா உனக்கு? என்னடா சோறு திங்கறே!” என்று கைகளை அமுக்கினார்.

சாம்பு விக்கிவிக்கி அழுதுகொண்டே தோளைப் பிடித்துக்கொண்டு வகுப்புக்கு போனான். அந்த ட்ரில் வாத்தியாரைப் பார்த்தாலே அவனுக்கு எப்போதும் ஒரு கிலி வரும்.

இன்று மகிமைதாஸ் அவனுக்கு எதிரிலேயே நிற்கிறார்!

சாம்பு வேகவேகமாக புல் வெளியில் நடந்து வகுப்புப் பக்கம்போய்க் கொண்டிருந்தான். மகிமைதாஸ் அவனைப் பார்த்து விட்டார். அவருடைய பார்வை அவன் நடையைத் தளர்த்தி நிற்க வைத்தது.

அவர் இவனைப் பார்த்து கூப்பிட்டது போல் சாம்புவுக்கு ஒரு பிரமை.

அவன், அவரிடம் தன்னிச்சையின்றி நெருங்கிப் போனான். மகிமைதாஸுக்கு ஞாபகம் அதிகம். சாம்புவைப் பார்த்தவுடன் அவனை ஊடுருவது போல் கண்ணை உருட்டி இடுப்பில் கை வைத்துக்கொண்டு கேட்டார்: “என்னாடா சோம்பு... ரொம்ப நாளா பள்ளிக்கூடம் பக்கமே வரலே! ஊர் சுத்தப் போயிட்டயா?” கட்டைக் குரலில் அதட்டலாகக் கேட்டார்.

சாம்புவுக்கு ஒரு நிமிஷம் தலைசுற்றுவது போல் இருந்தது. உடம்புக்குள் ஒரு நடுக்கம்!

“இல்லே ஸார்! உடம்புக்கு வந்துடுத்து ஸார்... ரொம்ப இருமல் ஸார். அதான் வரலே!” வாய் குழறி பேசினான்.

மகிமைதாஸ் அவனை ஊடுருவது போல் பார்த்தார்.

“அப்பறம் என்னாச்சு? இப்போ உடம்புக்கு சுகமாயிருச்சா? ஆங்...” ஏன்று அவன் தோளை அழுத்திக்கொண்டு கேட்டார்.

“சரியாயிடுத்து ஸார். இப்போ மூச்செல்லாம் வாங்கறதில்லே! இருமல் சரியாயிடுத்து ஸார். டாக்டர்கூட சர்டிபிகேட் கொடுத்திருக்காரு!”

ம்கிமைதாஸ் அலட்சியமாக சிரித்தார். “ஓ.... சட்டிபிகேட் வாங்கிட்டு வந்திருக்கயாடா? எங்கே காட்டு... பாக்கலாம்!”

சாம்புவுக்கு, ‘இதையெல்லாம் இவரிடம் ஏன் நான் சொல்ல வேண்டும்?’ என்று ஒரு கணம் தன் தவறை எண்ணிக் கடிந்துகொண்டான். பயமாக இருந்தது.

சட்டைப் பையிலிருந்து தயக்கமுடன் சர்டிபிகேட்டை எடுத்து அவரிடம் கொடுத்தான்.

அந்த சர்டிபிகேட்டைப் பிரித்து அதில் இருந்த

கையெழுத்தைப் பார்த்தவுடன் மகிமைதாஸின் முகத்தில் ஜிவ்வென்று ஒரு உஷ்ணம் மின்னலடித்து மறைந்தது.

"ஓ அப்படியா? இங்கே கிட்ட வாடா பாக்கலாம்." மகிமைதாஸ் சாம்புவை தன் பக்கம் இழுத்து அவன் நெஞ்சில் கை வைத்துப் பார்த்தார்.

"இப்ப ஒனக்கு இளைப்பு வாங்காதோ!"

சாம்பு நடுங்கிக்கொண்டே பதில் சொன்னான். "எனக்கு சரியாயிடுத்து ஸார்... மருந்தெல்லாம் சாப்பிட்டேன் ஸார்."

"அப்படியா! ஒங்க டாக்டர் சொல்லிட்டாரோ?"

"ஆ...மா...ம் ஸார்.."

அப்போது பள்ளிக்கூடத்தில் முதல் மணி அடித்துவிட்டது. இன்னும் ஐந்து நிமிஷத்தில் இரண்டாம் மணி அடிக்கும் போது எல்லோரும் வகுப்புக்குள் போய்விட வேண்டும்.

மகிமைதாஸ் சாம்புவின் தோளைப் பிடித்துக்கொண்டு சொன்னார்: "டேய்... ஒனக்கு இப்ப நல்லா ஆயிடுச்சின்னா நான் சொல்ற மாதிரி செய்யணும். அதோ பாரு அங்கே கோல் போஸ்ட் தெரியுதுல்லே! வேகமா ஓடிப் போயி அதைத் தொட்டுட்டு வேகமா திரும்பி ஓடி வந்து நேரா க்ளாசுக்குப் போவணும்! தெரியுதா! நடுவுலே நின்னே... அப்பறம் பாரு! சரியா!... இப்பொ ஓடுரா!" என்று முதுகில் தட்டித் தள்ளிவிட்டு வகுப்புப் பக்கம் நடந்தார்.

சாம்புவுக்கு ஒரு கணம் படபடப்பாக இருந்தது. தோளில் கனக்கும் புத்தகப் பையுடன் மெள்ள ஓட ஆரம்பித்தான். மற்ற பையன்கள் வேகமாக வகுப்புகளுக்கு ஓடி விட்டார்கள்.

இரண்டு வாரமாக படுக்கையில் இருந்த அவனுக்கு அப்படி ஓடுவது மிகவும் கடினமாக இருந்தது. கால்கள் பின்னிக்கொண்டன.

முக்கால் தூரம் ஓடுவதற்குள் நெஞ்சு முட்டிக்கொண்டு வந்தது. இரண்டுவாரமாக படுத்த படுக்கையாக இருந்தவன். அவன் வேகமாக நடந்தே பல நாட்களாகி இருக்கும். எங்கே அந்த கோல் போஸ்ட்? அது அவனை நெருங்காமல் மேலும் மேலும் தள்ளிப் போய்க் கொண்டிருந்தது. அவன் இருதயத்தின் துடிப்பு மேலும் மேலும் சத்தமாகி காதில் இரைந்து கொண்டே இருந்தன. மூச்சின் இரைப்பு பெரிதாகிக் கொண்டிருந்தது,

வியர்வை வெள்ளமாக உடம்பு முழுதுவதும் வழிந்து கொண்டிருந்தது. பின்னால் மகிமைதாஸ் வாத்தியார் அவனை துரத்திக்கொண்டே வருவது போல் மனதில் பயமும் கிலியும் அவனைத் துரத்திக்கொண்டே இருந்தது. எங்கே அந்த கோல் போஸ்ட்? மேலும் மேலும் அது விலகிப் போய்க்கொண்டே இருந்தது. அதைத் தொட்டுவிட்டு திரும்பி ஓடி வகுப்புக்குப் போக வேண்டும்! வகுப்பு ஆரம்பித்திருப்பார்களோ! எங்கே அந்த சர்டிபிகேட்? பத்திரமாக வாத்தியாரிடம் கொடுக்க வேண்டுமே! அய்யோ! இதென்ன!! சாம்பு நெஞ்சைப் பிடித்துக்கொண்டான். எல்லாம் இருட்டாக இருக்கிறதே! கண்ணுக்கு எதுவுமே தெரியவில்லையே! மூச்சு முட்டுகிறதே! நெஞ்செல்லாம் புடைத்துக்கொண்டு பறக்கிற மாதிரி... இதென்ன! அய்யோ... அய்யோ! குதிரைக் குளம்பு மிதித்த மாதிரி விலா எலும்புகள் விண் விண்ணென்று தெறித்தன.

சாம்பு வாயை அகல விரித்துக்கொண்டு, உண்ட சோறெல்லாம் வழிய, தரையில் போட்ட மீனாக மூச்சுவிட முடியாமல் மைதானத்தில் விழுந்து, விலாப் புடைக்க அரற்றிக் கொண்டிருந்தான். சுற்றிலும் எல்லாம் இருண்டது போல் நினைவற்றுப் போய்விட்டது.

கண் விழித்து பார்த்தபோது அவன் எங்கோ மிதந்து கொண்டிருப்பது போல் இருந்தது. சுற்றிக் கூட்டமாக நின்று கொண்டிருந்த முகங்கள் மெல்ல மெல்ல தெளிவாகிக் கொண்டிருந்தன. டாக்டர் ஈஸ்வரன் அவன் கையில் ஊசி போட்டுவிட்டு தேய்த்துக் கொண்டிருந்தார்.

"ஏண்டா கண்ணு... என்னடா ஆச்சு? எப்படிடா இப்படி ஆச்சு?" என்று கண்களில் நீர் தளும்ப சாம்புவின் அப்பாவும் அம்மாவும் அவன் முகத்தினருகில் புலம்பிக் கொண்டிருந்தார்கள்.

சாம்புவுக்கு வார்த்தைகள் வெளி வரவில்லை. மூச்சின் இறுக்கம் இன்னும் தளரவில்லை. சுற்றிலும் பார்த்து விக்கி விக்கி அழுகை வந்தது. கண்களில் நீர் வழிந்து கொண்டிருந்தது.

"கம்பௌண்டர் கந்தசாமிதான் ஒன்னைத் தூக்கிண்டு வந்து எல்லா விவரத்தையும் சொன்னான்... யாரு.... அந்த மகிமைதாஸ் ஒன்னை வெரட்டினானா? அவன் ஓடச் சொன்னா நீ ஓடணமா? க்ளாசுலேதான் அவன் சொன்னதைக் கேக்கணும். மத்தபடி அநாவசியமா ஒன்னைத் தண்டிக்க அவனுக்கு அதிகாரம் கிடையாது! தெரிஞ்சுக்கோ!" என்றார் டாக்டர் ஈஸ்வரன், அவன் நெஞ்சைத் தொட்டவாறு.

"ஆமாம்... நல்ல வேளையா அந்த வழியா ஒங்க கம்பௌண்டர் கந்தசாமி சைக்கிள்ளே போனதினாலே சாம்பு கீழே கெடக்கறதைப் பாத்து இங்கே தூக்கிண்டு வந்தான்... சாம்பு... கடவுள்தான் ஒன்னைக் காப்பாத்தி இருக்கார்!" என்றார் சாம்புவின் அப்பா.

சாம்புவுக்குஇன்னும்மூச்சு சமனமாகவில்லை.மனதுக்குள் விவரிக்க முடியாமல் துக்கம் ஆறாமல் பொங்கிப் பொங்கி வழிந்து கொண்டிருந்தது. "இந்த ட்ரில் மாஸ்டர் ஏன் என்னிடம் இப்படிக் கடுமையாக நடந்துகொள்ள வேண்டும்? நான் என்ன தவறு செய்தேன்? இப்படியெல்லாம்கூட ஆசிரியர்கள் இருப்பார்களா? க்ளாசுக்கு போக முடியவில்லையே! வார்த்தை வராமல் அந்த நிகழ்வு ஆறாத ரணமாக அவன் பிஞ்சு மனதைக் கீறிக் கொண்டிருந்தது.

சாம்பு அம்மாவுக்குத் தாங்கவில்லை. "டாக்டர்... ஒரு உடம்பு நலிந்த குழந்தை மேல் அந்த மகிமைதாசுக்கு அப்படி என்ன ஒரு மிருகத்தனமான வன்மம்! இப்படி ஏன் அவன் நடந்து கொள்ளவேண்டும்?" என்று கேட்டாள்.

டாக்டர்அவர்களைகையமர்த்திநகர்ந்துவந்தார்."அம்மா... குழந்தை கொஞ்சம் தூங்கட்டும். ஏதோ கெட்டவேளை.... தற்செயலாக நேர்ந்துவிட்ட அசம்பாவிதம். எனக்கு விவரமா இப்போ சொல்ல முடியலே! இது எனக்கும் மகிமைதாஸ் குடும்பத்துக்கும் எப்போதோ ஏற்பட்ட தனிப்பட்ட விரோதம். அது இன்னும் நீடித்துக் கொண்டிருக்கிறது. அதனால் இன்று சாம்பு அவதிப்பட்டுவிட்டான். சூழ்நிலைதான் காரணம். அது மாறவேண்டும்" என்றார்.

சாம்பு இதைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

"டாக்டர் மாமா... அப்போ என் இருமலுக்கும் சூழ்நிலைதான் காரணம்னு சொன்னீங்க! அப்படீன்னா இதுவும் அந்த மாதிரி அலெர்ஜியா... டாக்டர்" என்றான் மெதுவான குரலில்.

டாக்டர் ஈஸ்வரனுக்கு சாம்புதான் இதைப் பேசினானா என்று ஒரு கணம் நம்ப முடியவில்லை. ●

**வைதீஸ்வரன் <vydheesw@yahoo.com>**

# எல்லை கடந்த நாய்கள்

**கோ. நாதன்**



என்னுடைய கிராமம்
மனிதப் புதைகுழியில்
பிரபல்யம் பெற்றிருந்தது.
அங்கே
ஊனம் தின்று வாழ்வுப்பட்ட நாய்கள்
எப்போதும் மக்கிய
எலும்புத் துண்டுகளுடன் அலைகின்றன.

***

உக்கிய எலும்புகளுடன்
அழுத்துக்கொண்ட நாய்கள்
என் கிராமத்தை விட்டு
நான்கு சகாப்தத்தின் பின்
இடம்பெயர்ந்து கொண்டிருக்கின்றன.

***

இப்போது
என் கிராமம் நாய்களின்
கடிச் சப்தங்களற்று கிடக்கிறது.
அந்த சப்தம்
பக்கத்து கிராமத்துள்
புகுந்து மிக அதிர்ந்து ஒலிக்கின்றது.

***

ஊன் சதைகளின்
சந்தர்ப்பதற்காய் காத்து கிடந்த
நாய்கள்.
காலத்தின் குறிக்கோளற்ற
சாத்தான் வருகையால்
நிபர்த்தியடைந்து
எல்லை நிலத்தில் குதூகலிக்கின்றது.

****

என் கிராமத்து
கோவில் மணி ஓசையும்
ஆலய மணி ஓசையும்
கேட்டுக் கேட்டு சலித்த நாய்கள்
இப்போது பாங்கோசை
கேட்டு மருகத் தொடங்கிவிட்டன.

***

என்னுடைய இனப்போரில்
ஒரு நிற சீருடையில்
ஒரு தேசப்படைகள் இருந்தது,
இந்த
அடிப்படைவாத போரில்
பல நிற சீருடையில்
பல நாட்டுப் படைகள் இருக்கின்றன.
..............
அதிலும்
சக இனத்தின்
மோப்ப நாய்களும் உலாத்துகின்றது.

***

பேசும் மொழி ஒன்றானாலும்
நடைமுறை வேறாக உணர்ந்த
நாய்கள்
மனிதச் சதைகள்
ரூசியும் இரத்த வாடையும்
எல்லோருடையதும் ஒன்றென
அந்த கிராமத்தில் பழக்கப்பட்டன. ●

# அழிக்க முடியாத நினைவுக் கல்

## வளநாடு சே. சுப்பிரமணியன்

நடுகல் --தீபச்செல்வன்; விலை ரூ. 180; வெளியீடு: டிஸ்கவரி புக் பேலஸ், சென்னை; தொலைபேசி: +91 87545 07070

இலங்கையில், கிளிநொச்சி அருகில் இருக்கும் இரத்தினபுரத்தைச் சேர்ந்த ஓர் இளைஞனின் நினைவுக் குறிப்புகள் இந்த நாவல். போராட்டத்தில் தனது அண்ணனை இழந்து, தாயையும் தங்கையையும் பிரிந்து அலைந்த ஒரு தம்பியின் துயரக்கதை. அதேநேரம், ஈழப் படுகொலை காலத்திற்கு முன்னும் பின்னுமான 25 ஆண்டு கால இலங்கைத் தமிழர்களின் வரலாற்றை, சில கதை மாந்தர்களின் வழியே சொல்லும் முக்கியப் படைப்பு.

பிரசன்னா வினோதன் இருவரும் இரத்தினபுரத்தைச் சேர்ந்த சகோதரர்கள். இவர்களுக்கு ஒரு தங்கையும் உண்டு. இவர்களது இளம் வயதிலேயே, தந்தை நடராசன் இறந்துவிட, தாயின் அரவணைப்பில் வளர்கிறார்கள். தமிழீழத் தாயகத்தை அடைந்துவிடும் இலட்சிய வேட்கையோடு இருந்த பிரசன்னா, புலிகள் இயக்கத்தில் சேர்கிறான். இயக்கத்தில் சேர்பவர்களுக்கு புதிய பெயர் ஒன்று வைக்கப்படும். அதன்படி, பிரசன்னாவிற்கு வெள்ளையன் என்ற பெயர் சூட்டப்படுகிறது.

விடுமுறை கிடைக்கும் நாள்களில் தாய், தம்பி, தங்கையைப் பார்க்க வீடு வருவான், வெள்ளையன். இயக்கத்தில் சேர்ந்தது ஒரு நேரம் பெருமையாகவும் மற்றொரு நேரம் பதட்டத்தையும் குடும்பத்தாருக்குத் தந்தது. ஒரு சோகமான நாளில், முகமாலைப் பகுதியில் ராணுவத்துடன் நடந்த சண்டையில், மரணத்தைச் சந்திக்கிறான் வெள்ளையன். போரின் பிற்பகுதியில், இலங்கை ராணுவம் புலிகள் வசமிருந்த எல்லா பகுதிகளையும் கைப்பற்றுகிறது.

போருக்குப் பிந்தைய காலத்தில், வினோதனின் தாயும் தங்கையும் முள்வேலி முகாமில் அடைக்கப்படுகிறார்கள். யாழ் நகரில் கல்லூரிப் படிப்பை முடித்த வினோதன், தனது தாயைத் தேடி, முகாமிற்குள் அலைகிறான். இறுதியில் தேடிக் கண்டடைகிறான்.

'மாவீரர்களின் துயில் இல்லம்' பெரும்பகுதி அழிக்கப்படுகிறது. ஒரு பகுதி, ராணுவத்தினரின் விளையாட்டு மைதானமாகிறது. மீதி இடத்தில் எருக்களை மண்டிக் கிடக்கிறது. மாவீரர்களின் நினைவைப் போற்றி நிற்கும் நடுகற்களை அழித்து விட்டதாய் கொக்கரிக்கிறது சிங்கள ராணுவம்.

வினோதனின் தாயோ, தனது மகன் வெள்ளையன் நினைவாக, ஒரு கல்லை கையிலேயே வைத்திருக்கிறாள். அதனைக் குளிப்பாட்டி, துடைத்து விடுகிறாள். பூக்கள் வைத்து விளக்கேற்றுகிறாள். 'பயங்கரவாதியைக் கொண்டாட இங்கே இடமில்லை' என்று சொல்லி, நினைவுக்கல்லை உடைக்கப்பார்க்கிறான் சிங்கபண்டார. முக்காலமும் இருக்கும் 'நடுகல்லை', இல்லாமல் செய்ய முடியாது என்பதை அவன் அறிந்திருக்கவில்லை.

வெள்ளையன் வீர மரணமடைந்த பத்தாவது ஆண்டில்தான் இந்த கதை துவங்குகிறது. வினோதனின் நினைவுகளில், கால் நூற்றாண்டுக் கதை முன்னும் பின்னுமாகச் சொல்லப்படுகிறது. சிறுவனாக இருக்கும்போதே, சிங்கள விமானத்தின் மீது கல்லெறிந்து துரத்தும் பிரசன்னா, இயக்கத்தில் இணையும் காட்சிகள் அழகாகச் சொல்லப்பட்டுள்ளன. நாம் சிறுபிராயத்தில் விளையாடிய திருடன் - போலிஸ் விளையாட்டு போல, அங்கே இருந்த ஆமி - இயக்கம் விளையாட்டு.

வெள்ளையனாக மாறிய தனது மகனை, மீண்டும் வீட்டுக்கு அழைத்துச் செல்ல புலிகள் இயக்க முகாமிற்குச் செல்லும் ஒரு தாயின் வேதனை, புரியும்படி எழுதப்பட்டுள்ளது. அது போலவே, இயக்கம், வெள்ளையனைத் திருப்பி அனுப்பிய போதும், தமிழீழத் தாயகம் அடைய வேண்டும் என்ற உணர்வுடன் அவன் மீண்டும் இயக்கம் நோக்கிச் செல்வதையும் நம்மால் புரிந்துகொள்ள முடிகிறது. இது வெள்ளையனுக்கும் அவனது தாய்க்குமான மனப் போராட்டம் மட்டுமல்ல, ஈழப் போராட்டத்தில் கலந்துகொண்ட ஒவ்வொரு போராளியின் கதையும் இப்படித்தான் இருந்தது என்பதை, கிளைக் கதைகளின் மூலம் உணர வைக்கிறார் தீபச்செல்வன்.

விடுமுறைக்கு வரும் வெள்ளையன் மீது, தாய் காட்டும் அதீத பாசம் நமக்குப் புரிகிறது. தலைக்கு நல்லெண்ணை தேய்த்து விடுவதும், தோசை சுட்டுத் தருவதுமான காட்சிகள் நெழ்ச்சியானவை. நடக்கும் நிகழ்வுகளை அறிந்தும் அறியாமலும் இருக்கின்ற தம்பி, தங்கையோடு வெள்ளையன் பேசிச் செல்லும் பத்திகளும் கனமானவை.

போர் நடைபெற்ற காலத்தில், மக்கள் இடம்பெயர்ந்துகொண்டே இருக்க வேண்டியிருந்தது. ஒரு பகுதியிலிருந்து மற்றொரு பகுதிக்கு மக்கள் நகர்ந்துகொண்டே இருந்தனர். வீதியே இடம் பெயரும் மக்களால் நிரம்பியிருந்தது.

"திரும்பி வருவோம் என்ற நம்பிக்கையில் சிலர், வீட்டுக்குள் பொருள்களை வைத்துப் பூட்டிவிட்டு வர, வேறு சிலரோ திரும்ப முடியாமலும் ஆகலாம் என்றெண்ணி, வளவு மண்ணைத் தவிர மற்றெல்லாவற்றையும் அள்ளி ஏற்றினர்", என்ற வரிகள் மனதை பாரமாக்கியது.

அயல் தேசத்திற்கு அகதிகளாகச் செல்லாமல், என்றாவது ஒருநாள், தாய் மண்ணில் நிரந்தரமாகக் குடியேறுவோம் என்ற நம்பிக்கையில் காத்திருந்த மக்கள், அங்கே எதிர்கொண்ட துயரம் சொல்லில் அடங்காதது. சொந்த நாட்டில் அகதிகளுக்கு உரிய மரியாதைகூட இன்றி, முள்வேலி முகாமிற்குள் தங்க வைக்கப்பட்டிருந்தனர்.



"சனங்களைத் தடுத்து வைத்து சித்திரவதை செய்யும் முள்வேலி முகாமுக்கு, நலன் புரி நிலையம் என்று பெயர். சொற்களிலேயே வாதை அடர்ந்திருந்தது. மனிதாபிமானப் போர் என்ற பெயரில் இன அழிப்புப் போர். வதை முகாம்களில் இனம் அழிப்பதற்கு புனர் வாழ்வு என்று பெயர். இப்படியாகத்தான் விடுதலைக்காகப்போராடியஇனம்அழிந்துகரைகிறது." இந்த பத்தியைப் படித்த போது, அரசியல் நிகழ்வுகள் மனதிற்குள் வந்து போவதைத் தடுக்க முடியவில்லை.

உலகின் பல்வேறு அரசியல் கட்சித் தலைவர்களும் முகாமினைப் பார்வையிட வந்ததும், புனர் வாழ்வு மையங்கள் நன்றாகச் செயல்படுகின்றன என சான்றிதழ் வழங்கியதும் நினைவுக்கு வந்தன. கூடவே, இலங்கை அரசால் அவர்களுக்கு வழங்கப்பட்ட அன்பளிப்புகளும் மனதில் தோன்றி மறைந்தன. அப்போது, மிருகக்காட்சி சாலை ஒன்றை, பார்வையிடுவதைப் போல, நம்மை பார்த்துச்செல்கிறார்களேஎன்றுமுகாம்மக்கள்,எண்ணி வருந்தியிருக்கக் கூடும். "இந்தச் சண்டை எல்லாம் எப்ப முடியும். நாங்க எல்லாம் எங்கடை வீடுகளில் ஒன்றாய் வாழுகிற காலம் எப்ப வரும்?" ஒரு தாயின் வலி மிகுந்த குரல் இது.

'6 கி.மீ நீளத்தில் உருவாக்கப்பட்டிருந்த உலகின் மிக நீண்ட சிறைச்சாலை அது' என தீபச்செல்வன் ஒரு வரியில் சொல்வது, ஓராயிரம் கேள்விக் கணைகளை நிகழ்காலத்தின் மீது வீசிச் செல்கிறது.

துணைக் கதையாக வரும் அன்ரனி கதாபாத்திரம் மறக்க முடியாதது. போரின் போது, ரத்தினாபுரத்திலிருந்து அக்கராயன் பகுதிக்கு இடம் பெயர்ந்திருந்தது அன்ரனியின் குடும்பம். பிரியதர்சன், இசைப்பிரியன், ஈழப்பிரியன், பிரதாபன் என நான்கு

பிள்ளைகளும் வயிறார சாப்பிட முடியாத நிலையைக் கண்டு வருந்துகிறான் அன்ரனி. ராணுவத்தின் கட்டுப்பாட்டுக்குள் சென்றுவிட்ட தனது காட்டில், விளைந்து கிடப்பவை கண்ணுக்குள் வந்து போகிறது. மனைவி ருக்மணியிடம் சொல்லிவிட்டு, இரவோடு இரவாக ரத்தினாபுரம் சென்று, முடிந்த மட்டும் உணவுப் பொருள்களை எடுத்து வருகிறான். ராணுவத்தின் கண்ணில் படாமல் பொருள்களை எடுத்து வரும் சாகசம் அடிக்கடி நடக்கிறது.

ஒருநாள் பிரியதர்சனும் உடன் வர, தென்னை மரங்களின்மீதேறிகாய்களைப்பறித்துக்கொண்டிருக்கும் போது,சிங்களராணுவம்இருவரையும்பிடித்துவிடுகிறது. எங்களை வேவு பார்க்க வந்தவர்கள்தானே எனக் கேட்டு துன்புறுத்துகிறது. 'எண்ட பிள்ளைகளின் பசியாற்றவே நான் வந்தேன்' என்ற பதில் அவர்களின் காதில் விழவே இல்லை. இருவரையும் கட்டி வைத்து, அடிக்கிறார்கள். சிகரெட் நெருப்பால் உடலெங்கும் உண்டான காயங்கள், தூண்டில் மீன்கள் போல இருந்தன. 'என்ட மகனை ஒன்னும் செய்யாதீங்க' என கதறி அழுகிறான் அன்ரனி.

ஏதோ யோசனை செய்தவர்கள், பிரியதர்சனின் மார்பில், நெருப்பால் எல்.டி.டி.ஈ. என எழுதுகிறார்கள். அவன் கையில் ஒரு பை மூட்டையைக் கொடுத்து, 'பிரபாகரனிடம் போய் இதைக் கொடு' என அவனை விரட்டுகிறார்கள். 'எண்ட அப்பாவை விட்டு விடுங்க' என அவன் அழும் போதெல்லாம், அவனது கன்னத்தில் துப்பாக்கியால் குத்துகிறார்கள். இயக்கத்தின் கட்டுப்பாட்டில் இருக்கும் அக்கராயன் பகுதிக்குள், மூடிக்கட்டிய பொதியுடன் நுழைகிறான் பிரியதர்சன்.

போராளிகள்பையைஅவிழ்த்துப்பார்த்தனர் அதில், வெட்டப்பட்ட அன்ரனியின் தலை. தனது நெஞ்சில் நெருப்பால்எழுதியராணுவத்திற்குஎதிராய்பிரியதர்சன் இயக்கத்தில் சேர்ந்தான். விரைவில் மூன்று தம்பிகளும் இயக்கத்தில் இணைந்தனர். ஆனால், சில ஆண்டுகளில் நான்கு பிள்ளைகளையும் போரில் பறிகொடுத்து விட்டு, ருக்மணி புலம்பிக் கொண்டிருக்கிறாள். பிள்ளைகளின் நடுகல்லும் புகைப்படங்களுமே அவளுக்கு இருந்த ஒரே ஆறுதல்.

வெள்ளையன் மரணம் ஏற்படுத்திய அதே அளவு துயரத்தை, அன்ரனியின் மரணமும் உண்டாக்கியது. தன் பிள்ளைகளின் பசியைப் போக்கச் சென்று, மாட்டிக் கொண்ட அன்ரனியின் மரணம் மையக்கதாபாத்திரத்தைவிட அழுத்தமாகவே சொல்லப்பட்டிருக்கிறது. அன்ரனியின் தியாகமும் எல்லா வகையிலும் உயர்ந்ததே.

இதுபோல் நாகேஸ்வரியக்கா, பொன்னையாப்பு, ஆனந்தி, அழகுராணி, நாடக நடிகர் மணியண்ணன், அன்பழகன் , பூரணி டீச்சர், பிரா என கதாபாத்திரங்கள் எல்லாம் வினோதனின் நினைவுகள் வழியாக வந்து போகிறார்கள். இன்னும் ஒரு பாத்திரமும் இருக்கிறது. துரோகச் செயல் செய்து, ராணுவத்துடன் ஒத்து வாழும் கதாபாத்திரம்.

நாவல் வெறுமனே, நடந்த நிகழ்வுகளை மட்டும் சொல்லிச் செல்லவில்லை. கூர்ந்து நோக்கினால், தீர்வு ஒன்று நாவல் முழுக்கப் பேசப்படுகிறது. மாவீரர் கல்லறையை பார்க்கச் செல்லும் இரு சிறுவர்களிடம்




அங்கிருந்த போராளி, 'நீங்கள் எல்லாம் நன்கு படிக்க வேணும் என்பதுதான் அவையிண்ட கனவு. உங்களுக்காகவே போராடி, அவை வீரச் சாவடைஞ் சார்கள். இடம்பெயர இடம்பெயர நீங்கள் படிக்க வேணும்', என்கிறார்.

படிக்கும் வயதில் இயக்கத்தில் சேரக் கூடாது. பாடசாலைக்குப் போய் நன்கு படியுங்கள் என்று இயக்கத்தார் சொல்வதும், நல்லா படிச்சாத்தான் எல்லாம் நல்லதா மாறும் என தாய் சொல்வதும் மிக முக்கியமான காட்சிகள். யாழ் நகரில், டீச்சராக வரும் பூரணி, "சவால்களைக் கடந்து, முன்னேறுற வாழ்க்கையிலதான் அர்த்தம் இருக்கு", என வினோதனிடம் சொல்லும் வார்த்தைகள்தான், அவன் சந்தித்த துயர்களுக்கான ஒரே பதில். ஆம், கல்வியின் மூலம்தான், எந்தஒரு சமூகமும் தனது நிலையை மேம்படுத்திக்கொள்ள முடியும் என்கிறது இந்த நாவல்.

சொந்த நாடின்றி அலைந்து கொண்டிருந்த யூதர்கள், தனது அறிவின் மூலம்தான் உலகை நிரப்பினார்கள். தவிர்க்கமுடியாதஅளவுக்குச்சாதனைகள்செய்தார்கள். அவர்கள் சந்திக்காத கோரங்கள் இல்லை. ஆனால், அறிவின் துணைகொண்டு நிமிர்ந்தார்கள். 'நடுகல்' நாவலும் படிப்பின் அவசியத்தை அழுத்தமாகவே பதிவு செய்திருக்கிறது.

நாவலுக்கானகட்டுக்குள்இதுவரவில்லையென்றால், போகட்டும்; நினைவுக் குறிப்புகள் என்றே இது இருக் கட்டும். எவ்வாறாயினும் இலக்கிய உலகில், இது ஒரு முக்கிய இடத்தைப் பெறுமென்றே தோன்றுகிறது. ●

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்




விலை ரூ.120/-




விலை ரூ.100/-




விலை ரூ.100/-




விலை ரூ.100/-




விலை ரூ.150/




விலை ரூ.120/




விலை ரூ.140/-

**அம்ருதா பதிப்பகம்**

அம்ருதா, 1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 இரண்டாவது தெரு,
மூன்றாவது பிரதான சாலை,
சி.ஐ.டி நகர் கிழக்கு, நந்தனம், சென்னை 600035.
அலைபேசி: 94440 70000

# ந. பெரியசாமி கவிதைகள்

**ஓவியம்: Carlo Carrà**



## மதுவோடை

ஒரு சில நாட்களாகத்தான்
இப்படியாகிறது.
குளிரில் துடிக்கும் குழந்தையின் உதடாக உடல்.
புத்தி கூறியது
நேற்று மிச்சம் வைக்கவில்லை.
வெளியேறினான்
வழக்கமாக கிடைக்கும்
கள்ளத்தனத்திலும் வழியற்றுபோனது.
முழுதாக இன்னும் 120 நிமிடங்கள்
சொர்க்கவாசல் திறப்பிற்கு.
நடுக்கம் கட்டுப்பாட்டை இழக்க
தீர்மானம் கொண்டவனாக
உடலைத் திறந்தான்
குடலை வெளியில் இழுத்து
சிறு துளையிட்டு நேற்றையதை டம்ளரில் நிறைத்தான்.
உடல் ஓடையாக விரிய பெருக்கெடுத்தோடியது மது.

## நிலவு இன்று பூமியில்

இரவை
புணர இயலா ஏக்கத்திலிருந்த பகல்
கள்ளுண்டவனின் மயக்கத்தில்.
காற்றின் இசைக்கு
மகரந்தங்களை ஈந்த பூக்கள்
நாணத்தில் கவிழ்ந்திருந்தன.
நட்சத்திரங்கள் வானில்
அதிசயத்தை கொண்டாடிக் கொண்டிருந்தன
இன்று பூமியில் நிலவென.
நிறைவுகொண்ட காமத்தில்
குளம் தத்தளித்துக் கொண்டிருக்க
கரையேறி வந்தவள்
மேகமாக அலைவுற்ற என்னுள்
அமிழ்ந்தாள்.
குளிர்மை தாளாது புரள
புதிதாகிக் கொண்டிருந்தோம்.



## வாலெயிறு ஊறிய நீர்

கிழித்திட வழியற்ற காற்று
நழுவிச் சென்றது.
உடலும் உயிருமான உறவுடையவளின்
உதடுகளோடு உதடுகள்
ஒன்றித்திருந்தன.
தேன்கலந்த பாலின்
சுவை மிஞ்சும் உமிழ்நீர்
சொட்டுகளாக தொட்டு
வழிந்தன உடலுள்
அருவியென.
பனிப்படலத்தில்
மிதந்துகொண்டிருந்தன
உடல்கள்.

## மடலேறுதல்

வேடிக்கையாக்கி நகைத்தோர்
சிலுவையில் ஏற்றிக் கொண்டிருந்தனர்.
வலி உணர்ந்தோர்

அனுதாபத்தின் ஓவியங்களாயினர்.

தின்னும் வெட்கத்தை
இறகென உதிர்த்தான்.

பொய்த்துப்போன முயற்சிகள்

நினைவில் முட்களாகிக் கொண்டிருந்தது.
வேறு வழியேதும் அறியாது
ஆதிப்பாட்டன்களின் மடலேறும் வழக்கை

மனம் கொண்டு
வாழ்ந்த வீதியில்
உடலால் கத்தித் திரிந்தான்
உயிரின் பெயரை. ●

**ந. பெரியசாமி <na.periyasamy@gmail.com>**

# வெறுமையுடன் ஒரு நடனம்

**மார்டின் பட்லர்**
**தமிழில்: ஷங்கர்ராமசுப்ரமணியன்**

போர்ச்சுகீசிய நாட்டில் வசிக்கும் மார்டின் பட்லர், சென்ற நூற்றாண்டைச் சேர்ந்த ரஷ்ய மெய்ஞானியான குர்ட்ஜிப் அவர்களின் நேரடி மாணவியான ரீனா ஹேண்ட்சின் உதவியுடன், ஆன்மப் பயிற்சிகளில் பல்லாண்டு காலம் ஈடுபட்டவர். மனித நிலைமைகள் பற்றிய ஆழமான புரிதலுக்கு இவர் வருவதற்கு ஸ்பினோஷா போன்ற தத்துவவாதிகளையும் முறையாகக் கற்றிருக்கிறார். என் காலத்தையும் என்னைச் சுற்றியுள்ள நிலைமைகளையும் புரிந்துகொள்வதற்கும் இந்தச் சூழ்நிலைகளுக்குள் எனது விழைவுகள், ஆசைகள், வலிகள் ஆகியவற்றைக் குறைத்துக்கொள்வதற்கும், எனக்கு வழங்கப்பட்டுள்ள வளங்களினூடாக நிறைவாகவும் நீதியாகவும் இருப்பதற்கும், மார்டின் பட்லரின் எழுத்துகள் உதவிகரமாக இருக்கின்றன. மார்டின் பட்லர் என்னிடம் ஏற்படுத்திய பயன்விளைவை இன்னும் சில வாசகர்களும் அடையலாம் என்ற நம்பிக்கையில், எனக்குப் பிடித்தவற்றை மொழிபெயர்க்கிறேன்.

வடிவமாக இல்லாததற்கு வடிவம் கொடுக்க முயல்வது தவிர்க்கவே முடியாத செயலாக இருப்பதால்,'வெறுமை' குறித்துஎழுதுவதில் உள்ளார்ந்த நிந்தித்தல் உள்ளது. இன்னும் தெளிவாகப் பார்ப்பதற்கு உதவக்கூடிய, பயன்பாட்டுக்குப் பிறகு அகற்றப்பட வேண்டிய தற்காலிகச் சாரக் கட்டுமானங்களாகவே இந்தத் தன்மையிலான கட்டுரைகளை அணுக வேண்டும்.

ஒரு காலியான இடம் தொடர்ந்து காலியாக இருப்பதில்லை; ஒரு அமைதியான மனம் தொடர்ந்து அமைதியாக இருப்பதில்லை என்பதால் இயற்கை வெற்றிடத்தை வெறுக்கிறது என்று கூறப்படுவதுண்டு. உண்மையில் காலியான வெளியென்று எதுவுமே இல்லை. மிகக் குட்டியூண்டு இடத்தில்கூட, துணை அணுத்துகள்கள் சிறு இடைவெளிகளில் நுரைத்துத் தோன்றி மறைகின்றன. இருக்கும் எல்லாப் பொருட்களையும் 'எல்லாம்' என்று கூறி இருப்பை வெற்றிடத்திலிருந்து வேறுபடுத்துகிறார் லாவோட்சு.

அவர் வெற்றிடத்தை இருள், அமைதி, மர்மம் நிறைந்ததாகக் காண்கிறார். எல்லாப் பொருட்களையும் அவர் தற்காலிகத் தோற்றங்களாக, உபயோகப்படுத்தப்பட்ட பின் நெருப்பில் எறிய வேண்டிய அலங்காரப் பொருட்களின் குப்பைகளாகவே பார்க்கிறார்."வானக,வையகத்திற்குத்/ தங்கள் கருணை சொந்தமில்லை;/ அவற்றுக்கு அனைத்தும் வைக்கோல் நாய்தான்./ ஞானிக்கும் தன் கருணை சொந்தமில்லை/ அவனுக்கு மக்கள் அனைவரும் வைக்கோல் நாய்தான்" என்கிறார் லாவோட்சு.

சீனாவில் சடங்குகளின்போது வைக்கோலில் செய்யப்பட்ட நாய் பொம்மைகளை வைப்பார்கள். அந்த வைக்கோல் நாய்கள் சடங்கு முடிந்தவுடன் கழிக்கப்படும் அல்லது தீயில் தூக்கியெறியப்படும். அந்த வெறுமையைத்தான், நீ, நான் உட்பட, அனைத்துத் தற்காலிகத்தோற்ற உருவங்களும் பிறக்கும் கருப்பையாக மதிப்பிடுகிறார்.

இயற்கையைப் போன்றே, மனிதர்களும் வெறுமையை நிரப்பும் முயற்சிகளை மேற்கொள்கின்றனர். அந்த வெறுமையின் தாங்க முடியாத மௌனத்தை நொறுக்குவதற்காக, பெரிய பெரிய கோட்பாடுகளையும் கருத்தாக்கங்களையும் சிந்தனையில் உருவாக்குகிறோம். அர்த்தம், காரணம், மதிப்பீடுகள், ஒழுங்கு, நல்லது, கெட்டது இன்னபிறவற்றின் அடிப்படையில் நாம் சிந்திக்கிறோம். 'காரணம்', 'அர்த்தம்' ஆகிய கருத்துருக்கள் அனைத்தும் முற்றிலும் பெரும்பாலானவர்களால் கண்டுகொள்ளவே படாத மனுஷ விவகாரங்களே. காரணம், அர்த்தம் குறித்து பிரபஞ்சத்துக்கு எதுவுமே தெரியாது. எதார்த்தத்தில், இந்த கருத்துருவங்கள் அனைத்தும், அந்த எல்லாப் பொருட்களுக்குப் பின்னால் மறைந்திருக்கும் நித்தியமான மௌனத்தைத் தவிர்ப்பதற்காக, நம்மை மதிப்பிட்டுக் ள்வதற்கான முயற்சிகள்தான்.

ஸ்பினோசா, கடவுளை, 'இருப்புக்கான ஆற்றல்' என்று குறிப்பிடுகிறார். எல்லாமும் தோன்றி மறையும் வெளியாக இருக்கும் இருப்பென்பது கூர்ந்து கவனிக்கப்பதற்கு லாயக்கற்றதே. ஆனால், வெற்றிடமோ தோன்றாமலும் நித்தியமாகவும் இருப்பதால் தூய்மையான ஆற்றலாக உள்ளது. அத்துடன் அர்த்தம், காரணம், நல்லது, கெட்டது என்று கண்டுகற்பிக்கும் முயற்சிகள் எல்லாம் வெறுமையைக் காலியாக்குவதைத் தவிர வேறில்லை.

வெறுமையுடன் நடனமாடுவதென்பது, இச்சைக்குரிய துணையுடன் நடனமாடுவதைப் போன்றது. கொஞ்சம் கூடுதலாக நெருங்கும் ஆசை தவிர்க்கவே முடியாதது. நம்மில் ஒவ்வொன்றும் அந்த வெறுமையை - விளக்க, மேலும் பொருள் சேர்க்க, வாழ்க்கைக்கு அர்த்தம் தர, ஒரு லட்சியத்தை வைத்திருப்பதன் வாயிலாக-நிரப்புவதற்கு விரும்புகிறது. ஆனால் அதைச் செயல்படுத்தும் போது, நாம் மெய்யான வாழ்க்கையைக் கொன்றுவிடுகிறோம். அதற்குப் பதிலியாக ஒரு சமயத்தையோ ஆன்மிகப் பயிற்சியையோ கருத்தியலையோ, ஒழுக்கம் தொடர்பான கருத்தமைவுகளையோ நாம் உருவாக்கிய பூதங்களாக உலவவிட்டு விடுகிறோம்.

வெறுமையை அழிப்பதற்கு வாழ்வு தரும் அழைப்பை நிராகரித்தபடியே வெறுமையுடன் நடனமாடுவதுதான் உச்சபட்ச நடனம். தோன்றாததற்கும், தன்னை நிரப்பிக் கொள்வதற்கு ஆசைப்படும் தோன்றியதற்கும் நிலவும் தீராத பதற்றம்; தற்போது இந்தச் சிறு கட்டுரை முடிந்துவிட்டது. வெறுமையை நிரப்ப மேற்கொள்ளப்படும் இன்னொரு முயற்சி என்று அதை நீங்கள் தூரப்போட்டு விடலாம்.

**ஷங்கர்ராமசுப்பிரமணியன்**
**<shankarashankara@gmail.com>**